# இலவசம்!

## பெருமளவு வேடிக்கை விளையாட்டு சிறிதளவு பன்ச்சுகளுக்கு!

போர்டு கேம்



25 காலி உறைகள்

ஸ்டிக்கர்கள்



10 காலி உறைகள்

குஷியாக பாரீஸ் கோகோனட் பன்ச் சாப்பிடுங்கள். ஆனால் காலி உறைகளை மட்டும் எங்களுக்கு அனுப்புங்கள். 25 காலி உறைகளுக்கு அருமையான போர்டு கேம், 10 காலி உறைகளுக்கு அழகான ஸ்டிக்கர்கள் பரிசாகக் காத்திருக்கின்றன. சீக்கிரம்! உடனே அனுப்புங்கள்!

உங்கள் பெயர், பிறந்த தேதி, முழு முகவரியுடன் காலி உறைகளை அனுப்ப வேண்டிய முகவரி: தபால் பெட்டி 7002, சென்னை 600 092.

சலுகை முடிவு தேதி 1995 பிப்ரவரி 28.
இச்சலுகை இன்றியும் பாரீஸ் கோகோனட் பன்ச் கிடைக்கிறது.



அசர வைக்கும் சுவை

HTA.7790.95

# BAND-AID®

# Funtest

## ஒவ்வொரு பேண்ட்-எய்ட் ஃபன்டெஸ்ட் பேக்குடன் இரண்டு ஃபன்ஸ்டிக்ஸ்* இலவசம்.

டாக்டர் குவேக்

எல்லி

சிம்ப்பூ

புஸ்ஸி

பண்டர்

ஹாப்ட்டர்

டாம்மி

கக்கூ

ரெக்ஸ்

முந்துங்கள்!

## உங்கள் ஃபன்ஸ்டிக்குகளை* சேகரிக்க ஆரம்பியுங்கள் இப்போதே!

* *நறுமணம்கொண்ட ப்ளாஸ்டிக் க்ரேயான்கள்*

**நிபந்தனைகள் :**

1. இப்போட்டியில் 4 முதல் 15 வயது வரையுள்ள குழந்தைகள் கலந்து கொள்ள முடியும். இந்திய பிரஜைகள் மட்டுமே பங்கேற்க முடியும்.
2. ஜான்சன் & ஜான்சன் மற்றும் ஒகில்வி & மேதர் நிறுவனங்களின் ஊழியர்கள் மற்றும் அவர்களின் உறவினர்கள் இப்போட்டியில் பங்கேற்க முடியாது.
3. ஒரு தனிநபர் எவ்வளவு நுழைவுப் படிவங்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
4. ஒவ்வொரு நுழைவுப் படிவமும் முழுமையாக நிறைவு செய்யப்பட வேண்டும். முழுமையாக நிறைவு செய்யாத அல்லது தெளிவில்லாத நுழைவுப் படிவங்கள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டா.
5. நுழைவுப் படிவங்கள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி 28 பிப்ரவரி 1995. ஆனால் கடைசி தேதியை நீடிக்கும் அல்லது முன்னதாகவே முடிவுறச் செய்யும் உரிமையை நிறுவனம் தன்னிடம் வைத்துக் கொள்கிறது.

# பேண்ட்-எய்ட்® ஃபன்டெஸ்டில் கலந்து கொள்ளுங்கள்.

நீங்கள் செய்ய வேண்டியது என்னவெனில் ஒரு ஸ்ட்ரிப்பிற்கு வண்ணம் தீட்டி ஒரு சில எளிய கேள்விகளுக்கு விடை அளியுங்கள். மற்றும் உங்களுக் குரிய பரவசமூட்டும் பல்வேறு பரிசுகளை வெல்லுங்கள்.




*மேலும் **1000** ஆரம்ப ஊக்கப்பரிசுகள்*
*(இன்றே உங்கள் நுழைவுப் படிவத்தை அனுப்பவும்)*

ஒரு ஃபன்ஸ்ட்ரிப் செய்யவும்!

*உங்கள் கற்பனாசக்தி கொண்டு இந்த பேண்ட்-எய்டை ஒரு ஃபன்ஸ்ட்ரிப்பாகச் செய்யவும். நீங்கள் வண்ணம் தீட்டலாம், வரையலாம் அல்லது அதன் மீது எழுதி ஒரு ஃபன்ஸ்ட்ரிப் - பாக்கலாம்.*

**சரியான விடையைக் (✓) குறிக்கவும்**

1. ஒரு பேண்ட்-எய்ட் ஸ்ட்ரிப்பின் சைஸ் என்ன?
   ☐ 19 மி.மீ. x 72 மி.மீ. ☐ 17 மி.மீ. x 70 மி.மீ. ☐ 21 மி.மீ. x 74 மி.மீ.
2. ஜான்ஸன் & ஜான்ஸன் பேண்ட்-எய்ட் ஸ்ட்ரிப்கள் மட்டுமே முழுமையான கிருமி நீக்கம் செய்யப்பட்டுள்ளன.
   ☐ உண்மை ☐ உண்மையல்ல
3. பேண்ட்-எய்ட் ஃபன்டெஸ்ட் பேக்கில் எத்தனை பேண்ட்-எய்ட் ஸ்ட்ரிப்கள் (அனைத்து வகை) உள்ளன? ☐ 20 ☐ 15 ☐ 30
4. பேண்ட்-எய்ட் பேட்-ன் மேலுள்ள ஆற்றல்வாய்ந்த மருந்தின் பெயர் என்ன?
   ☐ போரிக் பவுடர் ☐ பென்ஸால்கோனியம் குளோரைட் ☐ டிங்க்சர் அயோடின்
5. இந்தியாவில், பேண்ட்-எய்ட் ஸ்ட்ரிப்களில் எவ்வளவு வால்ட் டிஸ்னி பாத்திரங்கள் தோன்றியுள்ளன?
   ☐ 4 ☐ 6 ☐ 2

பெயர் : ______________________

பிறந்த தேதி : ______________ இனம் : ______________

முகவரி : ______________________

பள்ளி : ______________________



6. நுழைவுப் படிவம் திருப்பி அனுப்பப்பட மாட்டாது.
7. வெற்றி பெற்றவர்கள் தபால் மூலம் அறிவிக்கப்படுவார்கள்.
8. நடுவர்கள் முடிவே இறுதியானது.
9. காரணம் காட்டி/காரணம் காட்டாமல் இத்திட்டத்தை மாற்ற, நிறுத்தி வைக்க அல்லது வாபஸ் பெறும் உரிமையை ஜான்ஸன் & ஜான்ஸன் தன்னிடம் வைத்துக் கொள்கிறது.
10. அனைத்து நுழைவுப் படிவங்கள் சாதாரண தபால் மூலம் அனுப்ப வேண்டிய முகவரி: பேண்ட்-எய்ட் ஃபன்டெஸ்ட் C/o [illegible] த.பெ. எண் 16605, பம்பாய்-400 019.




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி

## மழலைகள் மனம் மலர!



சில வருடங்களுக்கு முன் முப்பது நாடுகளிலிருந்து சுற்றுப்புறச் சூழல் போட்டியில் கலந்து கொள்ள வந்தவர்கள் பல படங்களையும் மாதிரிகளையும் கொண்டு வந்திருந்தனர். அத்தேர்வின்போது முக்கிய விருந்தினராக கலந்து கொண்ட சுற்றுப்புறச் சூழல் அண்ணல் சுந்தர் லால் பகுகுணா அவர்களிடம் "உங்களில் எத்தனை பேர் செடிகளை நட்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார். ஒருவர் கூட தாம் நட்டதாகக் கூறிக் கை உயர்த்தவில்லை!

இப்போது பல பள்ளிகள் மரம் வளர்ப்பதன் முக்கியத்தைக் கூறி மாணவர்களைத் தம் பள்ளிகளில் செடிகளை நடச் செய்கின்றன. அவற்றை தினமும் அவர்களே பார்த்து வளர்த்து வரவும் கூறுகின்றன. ஒரிஸ்ஸாவில் ஒரு ஆசிரியர் ஒரு மாணவியிடம் அவள் வளர்க்கும் செடியருகே உட்கார்ந்து பாடச் சொன்னாராம். அச்செடி நன்கு வளர்ந்ததாம். மற்றொரு மாணவனிடம் அவனது செடியருகே உட்கார்ந்து கத்தச் சொன்னாராம். அது நன்கு வளரவில்லையாம்.



இதிலிருந்து பள்ளிக் குழந்தைகள் செடிகளும் மனிதர்களைப் போல உணர்ச்சியுள்ளவை எனத் தெரிந்து கொண்டார்கள். இதுபோலக் குழந்தைகளைச் செடிகளை வளர்க்கச் செய்து அவற்றைப் பாதுகாத்து சுற்றுப்புறச் சூழலை வளம் பெறச் செய்யக் கற்றுக் கொடுக்க வேண்டும்.

மதிமுகம் : 96 ஜனவரி 1995 புன்னகை : 1

தனிப்பிரதி : ரூ. 5.00 வருட சந்தா : ரூ. 60.00





# I shared my homework. And some maths. Did some patterns. Shared my Mortons.



# MORTON SWEETS

*We enjoy our School days....and Lunch Breaks more so with Mortons which we share. It has been our Family's favourite for years and years. Delicious and yummy in so many flavours. All with the goodness of Creamy Milk, Glucose and Sugar. Chocolate and Coconut Cookies, Rose Eclairs, Supreme Chocolate and Coconut Toffees, Lacto Bonbons, Mango King and so many other delicious treats. Um m m m m. Every bite a yummy delight.*

*A lifetime of real goodness*

**MORTON CONFECTIONERY & MILK PRODUCTS FACTORY**
P.O. : Marhowrah 841 418.Dist. : Saran, Bihar

CCM-2/90

செய்திகளும் தகவல்களும் :

# ஸ்ரீலங்காவின் புதிய சாதனைகள்!

ஸ்ரீலங்காவின் பிரதமராக ஆகஸ்ட் 19ல் பதவி ஏற்ற ஸ்ரீமதி சந்திரிகா குமாரதுங்கே முன்னாள் பிரதமர்கள் இருவரின் புதல்வி ஆவார். இவரது வயது 49 ஆண்டுகள். இவரது தந்தை எஸ்.டபிள்யூ.ஆர்.டி. பண்டாரநாயகே 1956 லிருந்து 1959 வரை ஸ்ரீலங்காவின் பிரதமராக இருந்தார். 1959ல் அவர் கொலை செய்யப்பட்டார். அதன்பின் அவரது மனைவி சிரிமாவோ பண்டார நாயகே பிரதமரானார். உலகிலேயே முதலாவது பெண் பிரதமர் என்ற பெயர் பெற்று 1960 முதல் 1965 வரையிலும் பிறகு 1970 முதல் 1977 வரையிலும் இருமுறை பிரதமராக இருந்தார்.

ஸ்ரீமதி சந்திரிகா குமாரதுங்கே பிரதமரான மூன்று மாதங்களுக்குள் அதாவது நவம்பர் 9ந் தேதி ஸ்ரீலங்கா அதிபர் பதவிக்குத் தேர்தல் நடந்தது. அதில் ஸ்ரீமதி சந்திரிகா ஆளும் கட்சியான 'பிபீள்ஸ் அலயன்ஸ் பார்ட்டி' சார்பில் போட்டியிட்டு 62 சத வாக்குகளைப் பெற்று வெற்றி பெற்றார். நவம்பர் 15ல் அவர் ஸ்ரீலங்காவின் அதிபர் பதவியை ஏற்றார். இப்பதவியைப் பெற்ற முதலாவது பெண்மணியும் இவரே.



இவர் நாட்டின் அதிபரானதும் அதுவரை அவரது அமைச்சரவையில் இருந்த அவரது தாயார் சிரிமாவோ பண்டாரநாயகே ஸ்ரீலங்காவின் பிரதமரானார். நவம்பர் 14ல் இவரது மந்திரி சபை ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. இதில் 22 அமைச்சர்கள் இடம் பெற்றனர்.

ஸ்ரீலங்கா 'ப்ரீடம் பார்ட்டி'யை அமைத்த ஸ்ரீபண்டாரநாயகே 1959ல்

கொலை செய்யப்பட்ட பிறகு அவரது மனைவி சிரிமாவோ பிரதமரானதில் எவ்வித ஆச்சரியமும் இல்லைதான். அவரது 35 ஆண்டு அரசியல் வாழ்வு அப்போது ஆரம்பமாகியது. 1960ல் நடந்த தேர்தலில் அவரது கட்சி மகத்தான வெற்றி பெற்றது. 1970ல் இடதுசாரி கட்சிகளின் ஆதரவுடன் தேர்தலில் வென்று மீண்டும் நாட்டின் பிரதமரானார். 1977ல் எதிர்கட்சியான 'யுனைடட் நேஷனல் பார்ட்டி' தேர்தலில் வெற்றி பெறவே அதன் தலைவர் ஜெயவர்த்தனே புதிய அரசியல் சட்டம் கொண்டு வந்து அவரே நாட்டின் அதிபரானார்.



1989லும் 'யுனைடட் நேஷனல் பார்ட்டி' தேர்தலில் வெற்றி பெற்றது. அதுவரை பிரதமராக இருந்த பிரேமதாசா நாட்டின் அதிபரானார். 1993ல் அவர் கொலை செய்யப்படவே அப்போது பிரதமராக இருந்த விஜயதுங்கே நாட்டின் அதிபரானார். இவருக்குப் பின்தான் ஸ்ரீமதி சந்திரிகா நான்காவது அதிபராகப் பதவி ஏற்றிருக்கிறார்.

1993ல் எஸ்.எல்.எப். கட்சி மற்றும் சில கட்சிகளுடன் கூட்டு சேர்ந்து 'பிபீள்ஸ் அலயன்ஸ் பார்ட்டி'யை அமைத்து ஸ்ரீமதி சந்திரிகாவைத் தலைவியாகத் தேர்ந்தெடுத்தது. அவ்வாண்டில் நடந்த மண்டலத் தேர்தலில் சந்திரிகா வெற்றி பெற்று முதலாவது பெண் முதலமைச்சராக ஆனார்.

சந்திரிகா அதிபரானதும் நாட்டில் அதிபர் ஆட்சியை ஒழித்து மீண்டும் ஜனநாயக முறை ஆட்சியைக் கொண்டு வரப் போவதாக அறிவித்துள்ளார். ஜுலைக்குள் இந்த மாறுதல் ஏற்படலாம் என்றும் அப்போது சிரிமாவோ பண்டாரநாயகே நாட்டின் அதிபராக, சந்திரிகா முழு அதிகாரங்கள் கொண்ட பிரதமராகச் செயல்படுவார் எனவும் எதிர்பார்க்கப்படுகிறது. இப்படி நடந்தாலும் இதுவும் ஸ்ரீலங்காவின் ஒரு புது சாதனையே.




# புளிமூட்டைக்காரி

தகட்டூரில் கனகவல்லி என்ற அழகான பெண் இருந்தாள். அவள் சிறு வயதிலேயே தன் தாயை இழந்தவள். அவளது மாற்றாந்தாய் அவளைத் தினமும் திட்டி துன்புறுத்தியதோடு அவளை ஒரு பணக்காரக் கிழவனுக்கு மூன்றாந்தாரமாகக் கல்யாணம் செய்து வைக்கத் திட்டமிட்டாள்.

இதை எப்படியோ அறிந்து கொண்ட கனகவல்லி ஒரு நாளிரவு யாருக்கும் தெரியாமல் வீட்டை விட்டுக் கிளம்பி ஊர் எல்லையிலுள்ள புளியந்தோப்பை அடைந்தாள். அதில் ஒரு மந்திரக் கிழவி இருப்பதை அவள் அறிவாள். அக்கிழவியும் கனகவல்லி அடிக்கடி அங்கு வந்து சுள்ளி பொறுக்கிப் போவதைப் பார்த்திருந்தாள்.

நள்ளிரவில் கனகவல்லி தனியாகத் தான் இருக்கும் இடத்திற்கு வந்தது கண்டு அக்கிழவி "என்ன பெண்ணே! இந்த வேளையில் இங்கு வந்தாய்?" என்று கேட்டாள். கனகவல்லியும் தன் மாற்றாந்தாயின் எண்ணத்தை விவரமாகக் கூறி "என்னை ஒரு கிழவனுக்கு கல்யாணம் செய்து வைக்கப் பார்க்கிறாள். இது எனக்கு இஷ்டமில்லை" என்றாள்.

அக்கிழவியும் "பயப்படாதே. நீ இங்கேயே என்னுடன் இரு. யாரும் உன்னை எதுவும் செய்ய முடியாது. நான் மந்திரங்கள் தெரிந்தவள். அதனால் என்னிடம் எல்லாரும் பயப்படுவார்கள்" என்றாள்.

கனகவல்லியும் பயமில்லாமல் அங்கே இருந்து வந்தாள். அவள் அக்கிழவிக்குப் பணிவிடைகள் செய்தும் சமைத்துப் போட்டும் அவள் மனதைச் சந்தோஷப்படுத்தி வந்தாள்.

கிழவி புளியந்தோப்பில் கிடைக்கும் புளியம் பழத்திலிருந்து புளி எடுத்துத் தலைநகருக்குக் கொண்டு போய்

-சிவனார் செல்வன்-



மறித்துக் கொண்டு நின்றாள். அவள் கனகவல்லியைப் பார்த்துத் திகைத்து "ஆகா! நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய்!" என்று ஆச்சரியத்தோடு கூறினாள்.

கனகவல்லி அவளைக் கண்டு பயப்படாமல் "யார் நீ? வழியை விட்டு விலகு. நான் தலைநகரின் சந்தைக்குப் போயாக வேண்டும்" என்று அதிகாரத்தோடு கூறினாள். குள்ள ராட்சஸியும் "நானும் உன்னோடு சந்தைக்கு வருகிறேன். இங்கே எல்லாரும் என்னைக் குள்ள ராட்சஸி என்று கேலி செய்கிறார்கள். கொஞ்ச நேரமாவது இவர்களது கேலிப் பேச்சைக் கேளாமல் சந்தோஷமாக இருக்கிறேன்" என்றாள்.

விற்று வந்தாள். அதில் கிடைத்த பணத்தில் தனக்கு வேண்டிய வருடாந்திரச் சாமான்களை வாங்கிக் கொண்டு வருவது வழக்கம்.

அந்தமுறை அவள் இரண்டு மூட்டைகளில் புளியை அடைத்து மாட்டு வண்டியில் ஏற்றி கனகவல்லியிடம் "இந்தத் தடவை நீ தலைநகருக்குப் போய் இதை விற்று நமக்கு வேண்டிய சாமான்களை வாங்கி வா" என்று கூறி அனுப்பினாள்.

கனகவல்லியும் புளி மூட்டைகளோடு வண்டியை ஓட்டிக் கொண்டு போனாள். வழியில் ஒரு பெரிய மரத்தடியே அவள் போனபோது அம்மரத்திலிருந்து ஒரு குள்ள ராட்சஸி குதித்து அவளது வண்டியை

கனகவல்லியும் "சரி. ஆனால் உன்னை ஒரு சாக்குப் பையில் கட்டி வைத்துதான் வண்டியில் அழைத்துச் செல்வேன். நீ பார்க்கவும், மூச்சு விடவும் சாக்கில் ஓட்டைகள் செய்தும் விடுகிறேன். உன் பெயரென்ன?" என்று கேட்டாள். குள்ள ராட்சஸியும் "என் பெயர் ராஜகுமாரி. நீ கூறிய படியே என்னை சாக்குப் பைக்குள் போட்டு ஓட்டைகளைச் செய்" என்றது.

கனகவல்லியும் அவளைச் சாக்கில் போட்டுக் கட்டி இரு புளி மூட்டைகளோடு வைத்தாள். தலைநகரில் சந்தைக்குப் போனதும் மூன்று மூட்டைகளையும் இறக்கி "புளி மூட்டை ஒன்று ஐம்பது ரூபாய்" என

அவள் கத்தி விலை கூறினாள்.

அப்போது ஒருவன் பஞ்சுமிட்டாய் எனக் கத்தி விற்றுக் கொண்டு வரவே மூட்டைக்குள் இருந்த குள்ள ராட்சஸி "பஞ்சு மிட்டாயா? அது என்ன? எனக்கு வாங்கித் தா" என்றாள். கனகவல்லியும் "இரு, வாங்கி வருகிறேன்" என்று கூறி அடுத்தாற் போலிருந்த வெல்லக் கடை சிறுவனிடம் "இந்த மூட்டைகளைக் கொஞ்சம் பார்த்துக் கொள். நான் போய்ப் பஞ்சு மிட்டாய் வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்" என்று சொல்லி விட்டுப் போனாள்.



பஞ்சு மிட்டாய்க்காரன் வெகு தூரம் போய் விட்டதால் கனகவல்லி அவனைத் தேடிக் கொண்டு போய் மிட்டாய் வாங்கி வருவதற்குச் சற்று நேரமாகி விட்டது. ஆனால் வந்து பார்த்தபோது மூன்று மூட்டைகளும் இல்லாதது கண்டு அவள் திகைத்து நின்றாள்.

அப்போது வெல்லக் கடைக்காரப் பையன் அவளிடம் நூற்றைம்பது ரூபாய்களைக் கொடுத்து "உனக்கு சிரமமே இல்லாமல் உன் புளி மூட்டைகள் விற்றுப் போய் விட்டன பார்! அரசகுமாரிக்குக் கல்யாணமாம். அதற்காகக் கிடைத்த புளியை அரசாங்க வீரர்கள் வாங்கிக் கொண்டு போய் விட்டார்கள். அதனால் உன் புளிக்கும் பணம் கிடைத்து விட்டது" என்றான்.

இதைக் கேட்ட கனகவல்லி திடுக்கிட்டாள். தன்னை நம்பி வந்த குள்ள ராட்சஸியின் கதி என்னவோ என்று அவள் மனம் கலங்கினாள். அரசாங்க வீரர்கள் அவளைக் கண்டு பிடித்து என்ன செய்வார்களோ என்று பயந்து சற்றும் தாமதியாமல் அரண்மனைக்கு ஓடினாள். அங்கு சமையலுக்கான சாமான்கள் வைக்கப் பட்டிருந்த இடத்தைத் தேடிக் கண்டு பிடித்து ஒரு வேலைக்காரி போல உள்ளே போய் சுற்றிலும் பார்த்தாள். ஓரிடத்தில் தன் மூன்று மூட்டைகளும் இருந்ததைக் கண்டதும் அவளடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

அவள் அம்மூட்டைகளருகே சென்றாள். சுற்றிலும் யாரும் இல்லை என்பதை உறுதி செய்துகொண்டு



அவள் ஒரு மூட்டையருகே போய் 'ராஜகுமாரி' என்று குரல் கொடுத்தாள். உடனே சாக்குப் பையிலிருந்து "பஞ்சுமிட்டாய் வாங்கி வந்தாயா?" என்ற குரல் கேட்டது. அதுகேட்டு நிம்மதியடைந்த கனகவல்லி "மிட்டாய் பற்றிப் பிறகு சொல்கிறேன். இப்போது நாம் ஒரு பெரிய ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம். நன்றாக இருட்டியபின் நாம் தப்பி ஓடி விடலாம். அதுவரை நீ சாக்குப் பைக்குள் இரு. ராஜகுமாரி என்று நான் குரல் கொடுத்ததும் நீ வெளியே வா" என்று கூறிவிட்டுச் சற்று தூரத்திலுள்ள பூங்காவினுள் சென்றாள்.

அங்கு ஓரிடத்தில் செடி மறைவில் ஒரு பெண் உட்கார்ந்திருப்பதைக் கண்டு கனகவல்லி அங்கு சென்றாள். அந்தப் பெண்ணைப் பார்த்தால் அரசகுமாரி போலிருக்கவே கனகவல்லி அவளிடம் "யாரது? அரசகுமாரியா? மணக்கோலத்தில் இருக்க வேண்டிய நீங்கள் இப்படிக் கண்ணீர் வடிக்கக் காரணம் என்ன? இந்தக் கல்யாணம் செய்து கொள்ள உங்களுக்கு இஷ்டமில்லையா?" என்று கேட்டாள்.

அவளும் "ஆம். அரசகுமாரிதான் நான். ஆனால் எனக்கு இந்த திருமணத்தில் விருப்பமில்லை என்று எப்படிக் கண்டு கொண்டாய்?" என்று ஆச்சரியப்பட்டுக் கேட்டாள். கனகவல்லியும் "நானும் உங்கள் நிலையிலிருந்து வீட்டைவிட்டு ஓடி வந்தவள்தான். உங்களுக்கு இந்தத் திருமணத்தில் விருப்பம் இல்லை என்றால் உங்கள் பெற்றோரிடம் கூறி இருக்கலாம் அல்லது உங்களை மணக்கப் போகும் அரசகுமாரரைச் சந்தித்துக் கூறி இருக்கலாமே" என்றாள்.

அரசகுமாரியும் "என் பெற்றோரிடம் என் மன நிலையைக் கூற பயம். ஏனென்றால் நான் இளஞ்சிற்பியை விரும்புகிறேன். நீ கூறியபடி என்னை மணக்க வந்துள்ள அரசகுமாரரிடம் இதைக் கூறி என் திருமணத்தை நிறுத்தி விடுகிறேன். இதோ முத்திரை மோதிரம். இதை அணிந்து கொண்டால் நீ அரண்மனையில் எங்கு வேண்டுமானாலும்

போக முடியும். இதை என்னை மணக்க வந்துள்ள அரசகுமாரரிடம் காட்டி அவரை இங்கே அழைத்து வா" என்றாள்.

கனகவல்லியும் "இங்கே வேண் டாம். அதோ சமையல் சாமான்கள் வைத்திருக்கும் இடத்திற்குப் போய் இருங்கள். நான் அந்த அரசகுமா ரரை அங்கு அனுப்பி வைக்கிறேன்" எனக் கூறிவிட்டு அரண்மனைக்குள் போனாள். அரசகுமாரியின் மோதி ரத்தைக் காட்டியவாறே அவள் தடை ஏதும் இல்லாமல் சென்று மண மகனான அரசகுமாரனைக் கண்டு அவனை அரசகுமாரி அப்போதே சந்திக்க விரும்புவதாகக் கூறினாள்.



அந்த அரசகுமாரனும் அரச குமாரியைச் சந்திக்க சமையல் சாமான்கள் வைக்கப்பட்டிருந்த இடத் திற்குச் சென்றான். ஆனால் ஒரு சில விநாடிகளிலேயே திரும்பி வந்த அவன் அவளிடம் "பெண்ணே, உன் பெயரென்ன?" என்று ஆவலுடன் கேட்டான்.

அவளும் 'கனகவல்லி' என்று கூறவே அந்த அரசகுமாரனும் "நல்ல வேளை. நீ என்னை ஒரு ஆபத்தி லிருந்து காப்பாற்றினாய். அந்த அரச குமாரி அழகா என்ன? நான் இந்த முகூர்த்தத்தில் உன்னை மணக்க விரும்புகிறேன். நீ ஒரு அப்சரப் பெண் போல அழகாக இருக்கிறாய்" என்றான்.

கனகவல்லியும் "ஐயா! நான் ஏழை. உங்களுக்கு எந்தவிதத்திலும் ஏற்றவள் அல்ல" என்றாள். ஆனால் அரசகுமாரனோ "நீதான் எனக்கு ஏற்றவள்" என்றுகூறி அவளைத் தன் விருப்பத்திற்குச் சம்மதிக்க வைத் தான். இதற்குள் அரசகுமாரியைப் பற்றிய செய்தி அரண்மனையில் பர வியது. மணமகன் அரசகுமாரனின் முடிவும் யாவருக்கும் தெரிந்தது.

அந்த அரசகுமாரனுக்கும் கனக வல்லிக்கும் விவாகம் நடைபெற்றது. அரசகுமாரியின் தந்தையும் மகளின் விருப்பப்படி இளஞ்சிற்பியையே அவளுக்குத் திருமணம் செய்து வைத் தான். மன்னன் கனக வல்லியைப் பாராட்டி "உனக்கு என்ன வேண் டுமோ கேள்" என்றான்.

அவளும் "அரசே! திருமணத்திற்காக நீங்கள் சேகரித்துள்ள சாமான்களில் நான் விரும்பும் ஒரு மூட்டையைக் கொடுக்க வேண்டும். இதுவே நான் விரும்புவது" என்றாள். அது கேட்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். அரசனும் அவள் விரும்பிய மூட்டையை எடுத்துக் கொள்ள அனுமதித்தான்.

கனகவல்லி தான் விரும்பிய மூட்டையை எடுத்து ஒரு ரதத்தில் வைத்து அதை ஓட்டிக் கொண்டு குள்ள ராட்சஸி வசித்து வந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். அவள் அம் மூட்டையிடம் "ராஜகுமாரி! உன் உறைவிடம் வந்துவிட்டது. இனி ஆபத்து ஒன்றும் இல்லை. நீ பயப்படாமல் சாக்குப் பையிலிருந்து வெளியே வரலாம்" என்றாள். அவளோடு சென்ற அரசகுமாரன் இதென்ன வேடிக்கை என்று பார்க்கலானான்.

சாக்குப் பையிலிருந்து குள்ள ராட்சஸி வெளியே வந்தாள். அவளைக் கண்ட அரசகுமாரன் திடுக்கிட்டு "நீ தானே ராஜகுமாரி?" என்று கேட்டான். அவளும் "ஆமாம். நான்தான் ராஜகுமாரி. அதுதான் என் பெயர்" என்று கூறியவாறே தாவி அங்கிருந்து மரக்கிளை மீது ஏறி அமர்ந்தாள்.

முந்தின இரவில் சமையல் சாமான்கள் வைக்கப்பட்டிருந்த இடத்திற்கு அந்த அரசகுமாரன் போய் 'ராஜகுமாரி! ராஜகுமாரி' என்று கூப்பிட்டபோது அந்தக் குள்ள ராட்சஸி தான் சாக்குப் பையிலிருந்து வெளியே வந்தாள். அவளைக் கண்ட அரசகுமாரன் "ஓ! நீ பகலில் அழகாயும் இரவில் இப்படி விகாரமாகவுமா இருக்கிறாய்! நல்லவேளை இப்போது உண்மை தெரிந்தது. உன்னை மணக்க மாட்டேன்" என்று கூறியவாறே ஓடி வந்து தான் கனகவல்லியை மணக்கத் தீர்மானித்தான்.

அரசகுமாரன் அதைக் கனகவல்லியிடம் கூறிச் சிரித்தவாறே "இந்தப் புளி மூட்டைக்காரியால்தான் நம் திருமணம் நடந்தது. அவள் வாழ்க" என்று கூறினான்.





# புவனசுந்தரி

## 3

*(ட்ராய் நகரில் ஆண்டுதோறும் நடக்கும் விழாவில் மோகன் கலந்து கொண்டு எல்லாப் போட்டிகளிலும் முதலாவதாக வந்தான். அப்போது மன்னன் வர்த்தனனுக்கு மோகன் தன் மகன் என்பது தெரிந்தது. மோகன் புவனசுந்தரியை அடைய தினமும் காமினி தேவதையை வழிபட்டு வந்தான். அவன் ஸ்பார்டா நகருக்குப் போய் புவனசுந்தரியின் அரண்மனையில் தங்கி அவளது கணவன் பிரதாபன் இல்லாதபோது அவளைத் தன் கப்பலில் ஏற்றிக் கொண்டு ட்ராய்க்கு வந்து விட்டான். கிரேக்கர்கள் புவனசுந்தரியை மீட்க நடத்திய பேச்சு வார்த்தைகள் தோல்வியுற்றன. அதன் பிறகு-)*

புவனசுந்தரியைப் பேச்சு வார்த்தைகள் வாயிலாக விடுவிக்க முடியாமல் போகவே பிரதாபன் எல்லா கிரேக்க அரசகுமாரர்களிடமும் புவனசுந்தரியை மீட்கத் தான் ட்ராய் மீது படை எடுத்துப் போகப் போவதாயும் அதற்கு அவர்களும் தம் படைகளோடு வந்து உதவ வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டான்.

பல கிரேக்க அரசர்கள் பிரதாபனின் அழைப்பை ஏற்றுத் தம் படைகளோடு வரத் தயார் என்று பதில் அனுப்பினார்கள். ஆனால் ஓரிருவரிடமிருந்து பதில் வராமல் போகவே அவர்களைத் தான் நேரில் போய் அழைப்பது என்று பிரதாபன் தீர்மானித்தான்.

இதாகா மன்னனான ரூபதரனின் உதவியைக் கோரப் பிரதாபன் தன் அண்ணன் ராஜராஜனுடன் சென்



றான். ஆனால் ரூபதரன் போரில் கலந்து கொள்ளக் கூடாது எனத் தீர்மானித்திருந்தான். அதற்குக் காரணம் அவன் மட்டும் ட்ராய்க்குப் போனால் அவன் தன் நாட்டிற்குத் திரும்ப இருபத்தோரு ஆண்டுகளாகும் என்றும் அவன் பல இன்னல்களை அனுபவிக்க வேண்டி வரும் என்று ஒரு அசரீரி கூறியதே ஆகும்.

போருக்குப் போகாதிருக்க ரூபதரன் ஒரு பைத்தியக்காரனைப் போல நடித்தான். விவசாயி அணியும் கால்சாராயை தலையில் கட்டிக் கொண்டு ஏரில் ஒரு பக்கம் எருதையும் மறுபக்கம் ஒரு கழுதையையும் கட்டி உப்பை நிலத்தில் விதைத்து உழலானான். அவன் மனைவி பத்மமுகி தன் கைக்குழந்தையுடன் அவனருகே இருந்தாள்.

ரூபதரன் இப்படிப் பைத்தியக்காரன் போல நடித்ததோடு தன்னோடு பேசிய பிரதாபனையும் அவன் அண்ணனையும் முன்பின் அறியாதவன் போலப் பேசினான். அதுகண்டு அவர்கள் ஏமாறவில்லை. அவன் நடிக்கிறான் என்று புரிந்து கொண்ட அவர்கள் சட்டெனப் பத்மமுகியின் கையிலிருந்த குழந்தையைப் பிடுங்கி ரூபதரன் உழும் ஏரின்முன் படுக்க வைத்தார்கள். ரூபதரன் சட்டென ஏரை நிறுத்தினான். அவனுக்கு பைத்தியம் பிடிக்கவில்லை என பிரதாபனும் ராஜராஜனும் தெரிந்து கொண்டார்கள். அதனால் அவர்கள் அவனிடம் "நீ போரில் கண்டிப்பாக கலந்து கொள்ளத்தான் வேண்டும். உன்னை நேரில் கண்டு அழைக்கவே நாங்கள் வந்திருக்கிறோம்" என்றார்கள். அதனால் அவனால் போரில் கலந்து கொள்ளச் சம்மதிக்க வேண்டியதாயிற்று.

ஒரு சில சிற்றரசர்கள் ட்ராய் போரில் வேண்டா வெறுப்பாகக் கலந்து கொண்டார்கள். ஒரு கிரேக்க அரசகுமாரன் ஐம்பது கப்பல்களை அனுப்புவதாக வாக்களித்தான். ஆனால் அனுப்பியது ஒரு பெரிய கப்பல். அதனுள் நாற்பத்தொன்பது பொம்மைக் கப்பல்கள் வைக்கப் பட்டிருந்தன.

வஜ்ஜிரகாயன் என்ற இளைஞ னின் உதவி இருந்தாலே ட்ராய் நக ரைப் பிடிக்க முடியும் என்று சோதி டர்கள் கூறி இருந்தார்கள். இவன் தடினி என்பவனின் ஏழாவது மகன். தன் மகன் உலகிலேயே மாவீரனாக விளங்க வேண்டும் என்பதற்காக அவள் அவனை ஸ்டிக்ஸ் நதியில் முக்கி எடுத்தாள். அதனால் அவனது உடல் வைரம் பாய்ந்தது போல உறுதியாயிற்று. வஜ்ஜிரகாயன் சிறுவ னாக இருக்கும்போதே வேட்டையி லும், ஓட்டம், துணிகரச் செயல்கள், இசை என ஒவ்வொரு துறையிலும் சிறந்து விளங்கினான்.



அவன் ஆறாவது வயதிலேயே காட்டுப் பன்றியைக் கொன்றான். மான்களுக்கு இணையாக ஓடி அவற்றை வேட்டையாடினான். இந்த வஜ்ஜிரகாயனைப் போருக்கு அழைத் துப் போக ரூபதரனும் பூதவனும் நவத்யோதனனும் சென்றனர். ட்ராய் நகருக்கு வஜ்ஜிரகாயன் போனால் உயிரோடு திரும்பி வரமாட்டான் என்பது அவளது தாய் தடினிக்கு தெரியும். அதனால் அவள் அவ னுக்கு பெண் வேடம் அணிவித்து அந்தப்புரப் பெண்களோடு இருக்கச் செய்தாள்.

வஜ்ஜிரகாயனை அழைத்துப் போக வந்த மூவரும் அவனை எங்கு தேடியும் கிடைக்காமல் திகைத் தனர். அப்போது ரூபதரன் மூளை வேகமாக வேலை செய்தது. வஜ்ஜிர காயன் பெண் வேடத்தில் அந்தப்புரப் பெண்களோடுதான் கலந்து இருக்க வேண்டும் என அவன் ஊகித்து விட்டான். அதனால் பல பரிசுப் பொருள்களை அந்தப்புரப் பெண் களுக்குக் கொடுப்பது போல் பாவனை செய்து அப்பொருள் களோடு ஒரு வில்லையும் அம்பையும் வாளையும் வைத்து அவர்களுக்கு இஷ்டப்பட்டதை எடுத்துக் கொள்ளச் சொன்னான். எல்லோரும் பெண்கள் விரும்பும் பொருள்களாக எடுத்துக் கொள்ள, பெண் வேடத்தில் இருந்த வஜ்ஜிரகாயன் மட்டும் வில், அம்பு, வாள் முதலியவற்றை எடுத்தான். ரூபதரன் உடனே அவனைப் பிடித் துக் கொண்டு "இதோ வஜ்ஜிரகாயன்"

என்று கத்தினான். வஜ்ஜிரகாயனும் போரில் கலந்து கொள்ளச் சம்மதித்தான்.

கிரேக்கர்களின் கப்பல்கள் பேலிஸ் அருகே தயாராக இருந்தன. அப்போது கிரீட்டிலிருந்து ஒரு செய்தியைச் சிலர் கொண்டு வந்தார்கள். கிரீட் மன்னன் தனக்கும் ராஜராஜனுக்குச் சமமாய் சேனாதிபதிப் பதவியைத் தருவதானால் போரில் தன் படைகளோடு வந்து கலந்து கொள்வான் என்பதே அச்செய்தி. கிரீட் மன்னனான பிரபவனும் புவனசுந்தரியின் சுயம்வரத்திற்குச் சென்றவர்களில் ஒருவனாவான். அவனது நிபந்தனை ஏற்கப்பட்டது. பிரபவன் தன் நூறு கப்பல்களோடு வந்து சேர்ந்தான்.

போருக்கு கிரேக்கப் படை தயாராகியது. சேனாதிபதி ராஜராஜனும் துணைப் படைத் தலைவர்களாக ரூபதரனும், பிரபோதனும், தேவமயனும் இருந்தனர். கப்பல் படையின் தலைவன் வஜ்ஜிரகாயன். அவனுக்குத் துணையாக பூதவனும், ரத்தவர்ணனும் இருந்தனர். பீலஸ் மன்னனான நவத்யோதன் எல்லோரையும் விட வயதானவன். நல்ல போர் வீரன். நீண்டகாலமாக ஆட்சி புரிந்து வருபவன். கிழவனாகியும் தன் போர்த் திறனைக் காட்ட முன் வந்தான். ராஜராஜன் அவனைக் கலந்து ஆலோசியாமல் எந்த முடிவும் எடுப்பதில்லை நவத்யோதனன் கூறும் யோசனையும் ரூபதரன் கூறுவதும் அநேகமாக ஒன்றாகவே இருக்கும்.



பூதவனும் சிறந்த வீரனே. தைரியத்திலும் வீரத்திலும் அழகிலும் அவன் வஜ்ஜிரகாயனுக்கு அடுத்த படியாக வருபவன். அவன் தேவதைகளைக் கூட எதிர்க்கக் கூடியவன். அவன் போருக்குக் கிளம்பிய போது பெரியவர்கள் அவனிடம் "அப்பனே. நீ தேவதைகளின் ஆசி பெற்றுப் போருக்குப் போ" என்று கூறினார்கள்.

பூதவனோ "கோழைகளும் பயங்கொள்ளிகளுமே தேவதைகளின் ஆசிகளை நாடுவார்கள். நான் தேவதைகளின் உதவி இல்லாமலேயே வெற்றி மாலை சூடுவேன்" என்றான். பூதவனின் உறவினன் உபபூதவன். ஈட்டி எறிவதில் அவனுக்கு இணை யாரும் இல்லை எனலாம். ஓட்டத்திலும் அவன் யாவரையும் மிஞ்சுபவனே. ஆனால் வஜ்ஜிரகாயனுக்கு அடுத்தபடிதான்.

தேவமயன் புவனசுந்தரியைப் பெரிதும் விரும்பியவன். அதனால் மோகன் அவளைக் கவர்ந்து சென்றான் எனக் கேட்டதும் ஆத்திரம் கொண்டான். அதனால் போருக்கு எல்லோருடனும் சேர்ந்து புறப்பட்டான். டிலோஸ் மன்னனான மஸ்கரன் கிரேக்கப் படைக்குத் தேவையான உணவுப் பொருள்களைச் சேகரித்தான்.

கப்பல்கள் கிளம்பு முன் ராஜராஜன் தேவதைகளுக்குப் பலிகள் கொடுத்துப் பூஜையும் செய்தான். கான்சுகன் என்ற சோதிடன் கப்பல்களுக்கு வழிகாட்டியாகச் சென்றான்.





னான்.

இதற்குள் கிரேக்கர்களுக்குத் தாம் கரை இறங்கியது ட்ராய் நகரமல்ல என்பது தெரிந்து விட்டது. எனவே கப்பல்களில் ஏறி அவர்கள் அத்தீவை விட்டுச் சென்றார்கள். ஆனால் கடலில் பயங்கரப் புயல் வீசவே கப்பல்கள் பல்வேறு இடங்களுக்குப் பிரிந்து போயின. அதன்பின் அவை ஒன்று சேரவில்லை. அந்தந்த அரசகுமாரன் தன் கப்பலைத் தன் நாட்டிற்கு ஓட்டிச் சென்று விட்டான். இப்படியாக ட்ராய் மீதான முதல் படையெடுப்பு வீணாகியது.

ஆனால் அடுத்த ஆண்டே கிரேக்கப் படைகள் மீண்டும் ஒன்று சேர்ந்தன. கப்பல்கள் கிளம்ப அனுகூலமாகக் காற்று வெகுநாட்கள் வரை வீசவில்லை. தேவதைகளுக்குப் பல பலிகள் கொடுத்த பிறகே காற்று அனுகூலமாக வீசியது. அதன் பிறகே கப்பல்கள் கிளம்பி வெகுகாலம் பயணம் செய்து லெஸ்போன் தீவை முதலில் அடைந்தன. அத்தீவு மன்னன் கிரேக்கர்களை வரவேற்று உபசரித்து உணவளித்தான்.

அதன்பின் அம்மன்னன் அவர்களைத் தன்னோடு மற்போர்புரிய அழைத்தான். கிரேக்கர்கள் தரப்பில் ரூபதரன் அவனோடு மற்போர் புரிந்து அவனைத் தோற்கடித்தான். கிரேக்கர்கள் மகிழ்ந்து அங்கிருந்து கிளம்பி டெனடோன் தீவை அடைந்தனர்.

அவனுக்கு சோதிடம் பார்க்கத் தெரியும். கடல் வழி எல்லாம் தெரியாது. அதனால் கிரேக்கக் கப்பல்கள் சரியான வழியில் செல்லவில்லை.

கப்பல்கள் ட்ராய் கடற்கரையை அடையாமல் தென்திசையிலுள்ள மினியாத் தீவை அடைந்தன. தாம் ட்ராய் நகரை அடைந்து விட்டதாக எண்ணி கிரேக்க வீரர்கள் கரை இறங்கி அங்கு கொள்ளை அடிக்கத் தொடங்கி விட்டார்கள். அதுகண்டு மினியா மன்னன் தன் படைகளோடு கிரேக்கர்களை எதிர்த்தான். அப்போரில் கிரேக்க வீரர்கள் பலர் இறந்தனர். அப்போது சட்டென வஜ்ஜிரகாயன் வந்து எதிரிப் படையை விரட்டி கிரேக்கர்களைக் காப்பாற்றி

அத்தீவு ட்ராயிலிருந்து இருபது மைல் தூரத்தில் இருந்தது. ட்ராய் நகரக் கோட்டை மதில் மீது ஏறி நின்று பார்த்தால் அத்தீவு நன்கு தெரியும். எல்லோரையும் அத்தீவி லேயே இருக்கச் சொல்லிவிட்டு ரூப தரனும் புவனசுந்தரியின் கணவன் பிரதாபனும், பிரபோதனும் சமாதா னம் பேச ட்ராய் நகருக்குச் சென்ற னர். ஆனால் ட்ராய் மன்னன் புவன சுந்தரியை அவர்களிடம் ஒப்படைக்க மறுக்கவே சமாதானப் பேச்சுகள் முறிவடைந்தன.

சமாதானம் இல்லை என்றானதும் கிரேக்கக் கப்பல்கள் ட்ராய் கடற் கரைக்கு வந்து சேர்ந்தன. கரையி லிருந்து கிரேக்கர்கள் ட்ராய் கோட்டை மதில் சுவரைப் பார்த்தார்கள். கிரேக் கக் கப்பல்கள் வந்தது கண்டு ட்ராய் மக்கள் கோட்டைக்கு வெளியே வந்து கிரேக்கக் கப்பல்கள் மீது கற்களை எறிந்து தாக்குதல் நடத்தினார்கள். ஆனால் அத்தாக்குதல் பயனளிக்க வில்லை.

ட்ராய்க் கடற்கரையில் யார் முத லில் இறங்குவது என்ற பிரச்னை கிரேக்கர்களிடையே எழுந்தது. இதற் குக் காரணம் ட்ராய் கடற்கரையில் முதலில் இறங்குபவன் போரில் முதலில் இறப்பான் என சோதிடர் கள் கூறியதே. இதனால் வஜ்ஜிர காயன் போன்ற வீரர்கள்கூடக் கரை இறங்கத் தயங்கினார்கள்.

ஆனால் சந்திரப்பிரபன் என்ற கிரேக்க வீரன் சற்றும் பயப்படாமல் ட்ராய் கடற்கரையில் முதலில் இறங்கி பல ட்ராய் நகரத்தவரைத் தாக்கிக் கொன்றான். ஆனால் அவனை வீர சிம்மன் கொன்று விட்டான்.

சந்திரப்பிரபனுக்குப் பின் வஜ்ஜிர காயன் ட்ராய் கடற்கரையில் இறங்க அவன் பின் எல்லா கிரேக்க வீரர் களும் கரை இறங்கினார்கள். வஜ்ஜிர காயன் பல ட்ராய் வீரர்களை அடித் துக் கொல்லவே மற்ற ட்ராய் வீரர்கள் பயந்து ஓடிவிட்டார்கள். கிரேக்கர் களின் உற்சாகம் கரைபுரண்டது.

(தொடரும்)



## தேங்காயை உரிக்கும் புதுவிதம்!

## அம்புலிமாமா செய்திகள்

தேங்காயை உரித்தெடுக்க உரிகோலையோ அரிவாள் போன்ற கூரான ஆயுதங்களையோ உபயோகிக்கிறோம். ஆனால் இவ்வித ஆயுதம் எதுவும் இல்லாமல் தன் பற்களாலேயே தேங்காயின் மட்டையை உரித்துக் காயை 20 நொடிகளில் எடுத்து விடுகிறார் கேரளத்தில் கோழிக்கோடைச் சேர்ந்த ஜோஸ். உலர்ந்த தேங்காயானால் மட்டை உரிக்க 30 நொடிகளாகிறது இவருக்கு. முப்பத்திரண்டு வயதான இவர் தன் திறமையையும் பெயரையும் 'கின்னஸ் புக்'கில் சேர்க்கும்படி அந்த வெளியீட்டவர்களிடம் வேண்டிக் கொண்டிருக்கிறார்.



## புதிய காமதேனு!

ஹரித்துவாரத்தில் ஒரு ஆசிரமத்தில் 'சியாம்' என்ற பசு உள்ளது. அங்குள்ளோர் அதனைக் 'காமதேனு' என்று அழைக்கிறார்கள். ஏனெனில் அது கடந்த எட்டு ஆண்டுகளாகத் தொடர்ந்து பாலைக் கொடுத்துக் கொண்டே இருக்கிறது. 1982லும் 1984லிலும் அது இரண்டு கன்றுகளை ஈன்று விட்டுப் பிறகு கன்று போடவில்லை. ஆனால் பால் சுரப்பது மாத்திரம் நிற்கவில்லை. இதன் வயது 17. ஆனால் இன்னமும் கிழடு தட்டவில்லை. தினமும் 6 முதல் 15 லிட்டர் பால் கொடுக்கிறது. இதன் முதல் கன்றிற்கு இப்போது வயது 13. ஆனால் பல் போய் கிழடாகி விட்டது.



## நீளமான கார்!

உலகிலேயே நீளமான கார் லண்டனில் ராப் மியூசியத்தில் உள்ளது. 1982 காடிலாக் எனப்படும் இந்தக் காரின் நீளம் 22 மீட்டர். ஐந்து அடுக்கு மாடி உயரமுள்ள இதன் நிறை 7 டன்கள். சாதாரண ரோடுகளில் சென்றால் பெரும் தடை ஏற்படும் என்ற காரணத்தால் இதனை உபயோகப்படுத்தாமலே வைத்திருக்கிறார்கள். இப்போது அந்த மியூசியம் விரிவாக்கப்படுவதால் இவ்வளவு பெரிய கார் இடத்தை அடைக்கிறது என எண்ணி அதனை விற்க முயல்கிறார்கள். ஆனால் அதை வாங்குபவர்தான் இல்லை!




# பகைவனுக்கருள்வாய்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அவ்வுடலைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ மனம் தளராமல் விடாப்பிடியாக இம்முயற்சியில் ஈடுபட்டுள்ளதைப் பாராட்டுகிறேன். ஒரு சிலர் தம் முயற்சியில் வெற்றி பெற்றாலும் அதன்பின் எவ்வாறு நடந்து செல்வார்களென்று சொல்ல முடியாது. இதற்கு உதாரணம் ஞானதீபன், அவன் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

சூர்யபுரத்திலுள்ள பிரதீபனின் ஒரே மகன் ஞானதீபன். தந்தையும் மகனும் நற்குணங்கள் படைத்த

## வேதாளம் சொல்லும் கதை



வர்கள். ஞானதீபனுக்குத் தன் தந்தை என்றாலே உயிர். பிரதீபனுக்கு அறுபது வயதாகியது. அவனுக்கு ஒரு நாள் லேசாக மார்பு வலிக்கவே வைத்தியர்கள் வந்து பார்த்து விட்டு "இனி நீங்கள் பொறுப்பை எல்லாம் உங்கள் மகனிடம் ஒப்படைத்து விட்டு ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். அதிக சிரமமோ கவலையோ படக் கூடாது" என்றனர்.

பிரதீபனும் வீட்டு நிர்வாகத்தை முழுவதுமாக ஞானதீபனிடம் ஒப்படைத்தான். ஞானதீபன் பொறுப்பேற்ற ஒரு வாரத்திற்கெல்லாம் ஜக்கு என்பவன் அவனிடம் "நான் உன் பெரியப்பாவின் மகன் ஜக்கு. உன் தந்தை என் தகப்பனாரை ஏமாற்றி என் குடும்பத்தையே அழிவுக்குக் கொண்டு வந்துவிட்டார். இப்போது நான் யாருமில்லாத அநாதையாகி விட்டேன். இருக்க இடம் இல்லை. சாப்பாடு போடுவார் யாரும் இல்லை. எனக்கு வேறு எங்கும் போகப் புகலிடமும் இல்லை. அதனால் உன்னோடு என்னை நீ வைத்துக் கொள்ள வேண்டும்" என்றான்.

அதுகேட்டு ஞானதீபன் ஆச்சரியப்பட்டு "என் தந்தை ஒருக்காலும் இப்படிச் செய்திருக்க மாட்டார்" எனக் கூறவே ஜக்கு "இது பற்றி உன் தந்தையிடமே போய்க் கேட்கலாம் வா" என்றான்.

ஞானதீபனோ "வேண்டாம். என் தந்தை ஒரு இருதய நோயாளி. நீ ஏதாவது ஏடாகூடமாகப் பேசினால் அவர் உணர்ச்சி வசப்பட்டு விடுவார். அதனால் அவரது உயிருக்கே ஆபத்து ஏற்பட்டு விடும். நான் நம் உறவினர்கள் பலரிடம் இது பற்றி விசாரித்து அவர்கள் கைப்பட உண்மை என்ன என்று எழுதி வாங்கி வருகிறேன். அதுவரை நீ என் தந்தையைச் சந்திக்காதே. எதுவும் அவரிடம் பேசாதே" என்றான். ஜக்குவும் "ஆகா. நீ சொல்கிறபடியே நடக்கிறேன். உன் தந்தையிடம் எதுவும் கூறமாட்டேன். நீ சற்றும் கவலைப்படாமல் நம் உறவினர்களிடம் விசாரித்து விட்டுத் திரும்பி வா" என்று கூறி அனுப்பினான்.

ஞானதீபன் சுற்றும்முற்றும் பக்க ஊர்களிலுள்ள தன் நெருங்கிய உறவினர்களை எல்லாம் சந்தித்து ஜக்கு கூறியது உண்மையா என்று கேட்டான். அவர்கள் எல்லோரும் அது முழுப் பொய் என்றும் பிரதீபன் மிகவும் நேர்மையானவன் என்று கூறிக் கடிதமும் எழுதிக் கொடுத்தார்கள்.

ஞானதீபன் அக்கடிதங்களோடு தன் ஊருக்கு வந்து தன் வீட்டை அடைந்தபோது தன் தந்தை இறந்து கிடப்பதைக் கண்டான். தான் சொன்னபடி நடக்காமல் தந்தையின் உணர்ச்சிகளை ஜக்கு கிளறி இதயத் துடிப்பை அதிகரித்து அவரை அவன் சாகடித்து விட்டான் என்று ஞானதீபன் ஊகித்து விட்டான்.

அவன் ஜக்குவை வீட்டை விட்டு விரட்டி "நீயும் உன் தந்தையும் வடிகட்டின அயோக்கியர்கள் என்று எல்லா உறவினர்களும் கூறிவிட்டார்கள், எதை நீ செய்யக்கூடாது என்று நான் தடுத்திருந்தேனோ அதைச் செய்து என் தந்தையின் உயிரைப் போக்கி விட்டாய். இனி என் முகத்தில் விழிக்காதே" எனக் கூறி விட்டான்.

தந்தை இறந்து ஒரு வருடகாலம் ஞானதீபன் துயரத்தில் மூழ்கிக் கிடந்தான். அவனது அன்னை அவனைத் தேற்றி அவனுக்குத் திருமணம் செய்து வைக்க முயன்றாள். ஞானதீபனும் ஒரு ஊருக்குப் பெண்



பார்க்கச் சென்றபோது பெண்ணின் தந்தை "உங்கள் குடும்பம் மிக உயர்ந்தது என்று உங்கள் பெரியப்பாவின் மகன் ஜக்கு கூறினார்" என்றார். அதைக் கேட்டதுமே ஞானதீபன் அந்த சம்மந்தம் வேண்டாம் என்று தன் ஊருக்குத் திரும்பிச் சென்றான்.

ஜக்கு சம்மந்தப்படும் எந்த விஷயமும் தனக்குத் தேவை இல்லை எனக் கூறி ஜக்கு தலையிடாத ஒரு வீட்டுப் பெண்ணை மணந்து கொண்டான். ஜக்குவின் எந்த செய்கையிலும் ஏதோ சதி இருக்கும் என்றே அவன் எண்ணினான். தன் திருமணத்திற்கு ஞானதீபன் ஜக்குவை அழைக்கவும் இல்லை. அது மட்டுமல்ல. ஜக்குவின்



விவாகம் நடந்தபோது அழைப்பு இருந்தும் ஞானதீபன் அவ்விவாகத் திற்குப் போகவில்லை.

ஞானதீபனுக்குத் திருமணமாகி ஒரு வருடமாயிற்று. அப்போது அவன் வயல்களை அடுத்து பத்து ஏக்கர் நிலம் விலைக்கு வந்தது. அதை வாங்கலாம் என்றால் அவ னிடம் முழுப் பணம் இல்லை. ஒரு ஆயிரம் வராகன் குறைவாக இருந் தது. அத்தொகையை யாரிடமிருந்தா வது கடன் வாங்கலாம் என அவன் எண்ணினான்.

அப்போது பட்டணத்திலிருந்து பங்காரய்யா என்ற வியாபாரி ஞான தீபனின் ஊருக்கு வந்தான். அவன் ஞானதீபனைக் கண்டு "உங்கள் வயலின் பயிர் நன்றாக உள்ளது. அதற்கு நான் இன்றைய சந்தை விலைக்கு இரண்டு பங்கு விலை கொடுக்கிறேன்" என்றான்.

ஞானதீபன் அது கேட்டு மகிழ்ந்து போனான். அவன் பங்காரய்யாவிடம் "ஐயா என் பயிர் மிக உயர்ந்தது என்று எப்படிக் கண்டு கொண்டீர்கள்?" என்று கேட்டான். அதற்கு பங்கா ரய்யா "உங்கள் பெரியப்பாவின் மகன் ஜக்குதான் கூறினான். மேலும் நீங்கள் நேர்மையானவர் என்றும் வியாபாரத்தில் எவ்வித ஏமாற்று வேலையும் செய்வதில்லை என்றும் கூறினான்" என்று சொன்னான்.

அதைக் கேட்டதும் ஞானதீபன் பங்காரய்யாவுக்குத்தான் தன் பயிரை விற்கப் போவதில்லை என்று கூறி அவனை அனுப்பி விட்டான். ஞான தீபனின் மனைவி "பயிருக்கு நல்ல விலை கிடைக்கிறது. உங்கள் சகோ தரன் மனம் திருந்தி உங்களுக்கு நன்மை செய்யவே முயல்கிறார். நீங்களோ அவரிடம் பகைமை கொண்டு அவர் சம்மந்தப்படும் எந்த விஷயத்தையும் கண் மூடித்தன மாக புறக்கணிக்கிறீர்களே. இதனால் நமக்குத்தானே நஷ்டம்" என்று சொல் லிப் பார்த்தாள்.

ஞானதீபனோ "ஜக்கு என் எதிரி. அவனை ஒரு தடவை நம்பினேன். அதன் பலனாக என் தந்தையின் உயிரைப் பறி கொடுத்தேன். அத னால் அவனது எந்தப் பேச்சை

நம்பினாலும் எனக்குப் பெரும் நஷ்டமே ஏற்படும். அவனது பேச்சை நம்பாவிட்டால் எனக்குச் சிறிய நஷ்டந் தான் ஏற்படும். அதைப் பொறுத்துக் கொள்வேன்" என்றான்.

சூர்யபுரத்தில் ஞானதீபனுக்கு நல்ல பெயர் இருந்தாலும் ஜக்கு சம்மந்தப்பட்ட விஷயங்களை அவன் வெறுத்துப் புறக்கணித்ததால் கொஞ்சம் கெட்ட பெயரும் ஏற்பட்டது. சிலர் அவனிடம் "ஜக்கு உனக்கு நல்லதுதானே செய்கிறான். அதை ஏற்று லாபம் அடை" என்று சொன்னார்கள். ஞானதீபனோ அதை ஏற்க வில்லை.

இதனால் ஜக்குவின் பெயரை உபயோகித்து சிலர் ஞானதீபனிடமிருந்து ஆதாயம் அடைந்தனர். ஜக்கு சொன்னான் என்று ஞானதீபனிடம் கூறி விட்டால் அதைக் கண்டிப்பாக அவன் ஏற்க மாட்டான் எனத் தெரிந்து வியாபாரிகள் தந்திரமாக அவனிடம் பேசிக் குறைந்த விலைக்குப் பொருள்களை வாங்கிக் கொண்டு போனார்கள்.

அவன் மனைவி இதை ஞானதீபனிடம் எடுத்துக் கூறவே அவனும் "என்னை யார் யார் எப்படி ஏமாற்றுகிறார்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் இதிலெல்லாம் எனக்குக் கிடைக்க வேண்டிய லாபத்தில் ஒரு சிறு நஷ்டம் தான் ஏற்படுகிறது. என் வியாபாரம் நிலைத்து தொடர்ந்து நன்றாகத்தான் நடக்கிறது.



அப்படி இல்லாவிட்டால் நான் கஷ்டப்பட்டுக் கொண்டுதானே இருந்திருப்பேன். ஜக்குவை நான் ஒரு போதும் நம்பமாட்டேன். என் தந்தையின் உயிரை வேண்டுமென்றே போக்கியவன் அவன். அவனா எனக்கு நல்லது செய்கிறான்? இல்லவே இல்லை. அவன் என் ஜென்ம விரோதி. அவனைப் பற்றி இனி நீ என்னிடம் பேசாதே" என்று கூறினான்.

அவன் மனைவியும் அதற்குப் பிறகு தன் கணவனிடம் ஜக்குவைப் பற்றி பேசவில்லை. ஆனால் சில நாட்களுக்குப் பின் ஒரு அதிசய சம்பவம் நடந்தது. ஜக்கு ஏதோ ஒரு வேலையாக சூர்யபுரத்திற்கு வந்



தான். அப்போது அவ்வூரின் நடுத் தெருவில் ஒரு நல்ல பாம்பு அவனைத் தீண்டிவிட்டது. அவன் உடனே கீழே விழ அவனைச் சுற்றிக் கூட்டம் கூடியது.

சிலர் வைத்தியரை அழைத்து வா என்றார்கள். வேறு சிலர் மந்திரவாதியிடம் அழைத்துப் போகலாம் என்றார்கள். எல்லாம் பேச்சோடு நின்றதேயொழிய யாரும் செயலில் ஈடுபடவில்லை. அப்போது அவ்வழியாக ஞானதீபன் வந்து கொண்டிருந்தான். ஜக்குவின் காலில் பாம்பு கடித்த இடத்தில் கட்டுப் போட்டு அவன் தன் வாயால் விஷத்தை உறிஞ்சி எடுத்துத் துப்பினான். இவ்வாறு நாலைந்து முறை செய்த பின் ஜக்குவுக்கு நினைவு வந்தது. ஆனால் ஞானதீபன் களைத்துப் போய் நினைவிழந்து விழுந்து விட்டான். அதுகண்டு எல்லோரும் என்ன செய்வதெனத் தெரியாமல் திகைத்தனர். அப்போது கூட்டத்திலிருந்து ஒரு வைத்தியர் வந்து ஜக்குவையும் களைத்துச் சோர்ந்து விழுந்த ஞானதீபனையும் தன் வீட்டிற்குக் கொண்டு போனார். ஞானதீபனும் ஜக்குவும் பிழைத்து விட்டார்கள்.

ஞானதீபன் மனம் மாறி ஜக்குவைக் காப்பாற்றியதாகச் சிலர் கூறினார்கள். வேறு சிலரோ ஞானதீபன் நல்லவனாதலால் ஜக்குவைக் காப்பாற்ற முயன்றதாகக் கூறினார்கள்.

உயிர் பிழைத்த ஜக்கு தன்னைக் காப்பாற்றியவன் ஞானதீபன் என அறிந்து அவனிடம் "நீ தான் எவ்வளவு உயர்ந்தவன். 'ஜென்ம விரோதியாக நீ என்னைக் கருதி வந்தபோதிலும் என்னைக் காப்பாற்றினாயே. உன்னைப் பணிவுடன் வணங்குகிறேன்" எனக் கூறி அவனது கால்களில் விழுந்து வணங்கினான்.

ஆனால் ஞானதீபனோ "நீ என்றென்றும் என் விரோதிதான். நீ என்ன சொன்னாலும் அதை ஏற்க மாட்டேன். என் எண்ணமும் மாறாது" என்று கூறி அங்கிருந்து போய் விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி

"மன்னனே! ஜக்குதான் ஞானதீபனின் தந்தை இறந்ததற்குக் காரணம். இத னால் தான் ஞானதீபன் அவனைத் தன் விரோதியாகக் கருதி வந்தான். இப்படிப்பட்ட விரோதியை ஞான தீபன் தன் உயிரையும் பொருட் படுத்தாமல் விஷயத்தை உறிஞ்சித் துப்பிக் காக்க முயன்றான். இது சரியா? தன் விரோதி ஒழிந்தான் என்று ஞானதீபன் ஜக்குவைக் காப் பாற்றாமலே போயிருக்கலாமே. ஏன் அவன் அவ்வாறு செய்யவில்லை? என் இந்தக் கேள்விகளுக்கு நீ சரி யான பதில் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்" என்றது.

விக்கிரமனும் "ஞானதீபன் இயல் பாகவே நற்குணங்கள் கொண்டவன். ஆனால் உலகத்தைப் புரிந்தும் கொண்டவன். அதனால்தான் தன் எதிரியை அவன் நம்பவில்லை. ஒரு முறை ஜக்குவை நம்பினான். தன் தந்தையிடம் எதுவும் சொல்லக் கூடாது என்று அவன் ஜக்குவிடம் வாக்குறுதி வாங்கிக் கொண்டான். ஆனால் ஜக்கு அவ்வாக்குறுதியை மீறி விட்டான். அதனால் அவன் பெரிய நஷ்டம் அடைந்து விட்டான். தன் உயிருக்கு உயிரான தந்தையை இழந்து விட்டான். எனவே மறுபடி யும் ஜக்குவின் காரணமாக அவன் எதையும் இழக்கத் தயாரில்லை. ஆனால் நடுத்தெருவில் ஜக்கு தன் உயிருக்குப் போராடுவதைக் கண் டதும் ஞானதீபனின் நற்குணம் அவ னைக் காக்கத் தூண்டியது. ஞான தீபன் அப்போது ஜக்குவைப் பகை வன் எனப்பாராமல் மனிதன் என்ற நோக்கில் பார்த்தான். அதனால் தான் அவன் ஜக்குவைக் காப்பாற்றத் தன் உயிரையும் பொருட்படுத்த வில்லை" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# பாதை நடுவே கற்குவியலா!

வரகூர் ஜமீன்தாரர் ஒருமுறை தம் ஊரிலிருந்து வேறொரு ஊருக்கு ஒருநாள் இரவில் அவசரமாகப் போக வேண்டி வந்தது. அப்போதும் தம் அந்தஸ்தைக் காட்ட அவர் தம் ரதத்தில் பயணம் செய்தார்.

வழியில் பாதையின் நடுவே கற்கள் குவியலாக இருப்பதையும் அதன் மீது ஒரு எரியும் விளக்கு இருப்பதையும் கண்டு அவர் தன் ரதத்தை ஓட்டுபவனை உடனே நிறுத்தச் சொன்னார். அவனும் ரதத்தை நிறுத்தினான்.

ஜமீன்தாரர் ரதத்திலிருந்து இறங்கினார். அப்போது ஒரு மரத்தடியே படுத்திருந்த ஒரு கிழவன் எழுந்து வந்து அவரை வணங்கினான். ஜமீன்தாரரும் "இந்தக் கற்குவியல் மீது எரியும் விளக்கை வைத்தது யார்?" என்று கேட்டார்.

அக்கிழவனும் "நான்தான்" என்றான். ஜமீன்தாரரும் "இவ்வழியே வரும் வண்டிகள் இதன் மீது மோதாமல் நிற்க இப்படி நீ எச்சரித்தது நற்செயலே" எனக் கூறி அவனுக்குப் பத்து வராகன்கள் பரிசளித்தார். பிறகு அவர் "ஆமாம்! இந்தக் கற்குவியல் இங்கே எப்படி வந்தது?" என்று கேட்டார்.

கிழவனும் "நான்தான் குவித்து வைத்தேன்" என்றான் சிரித்தவாறே.



# அம்புலிமாமா அனுபந்தம் – 74

நம் நாட்டு மரங்கள் :

## பாக்கு மரம்



நாம் வெற்றிலை போடுவது என்றால் முதலில் பாக்கை வாயில் போட்டுக் கொண்டு பிறகு வெற்றிலையில் சுண்ணாம்பைத் தடவி வாயில் போட்டு மெல்கிறோம். இவை மூன்றும் சேர்ந்துதான் சுவை அளிக்கிறது. பாக்கு இல்லாமல் வெற்றிலை இல்லை. உயரமாய் வளரும் பாக்கு மரங்களில் கிடைக்கும் பாக்குக் காய்களுக்கு நல்ல கிராக்கி உள்ளது. வெற்றிலை போடுவோருக்கு மட்டுமல்லாமல் இக்காய்கள் எழுதும் மை தயாரிக்க பயன்படுகின்றன. இவற்றைக் கொண்டு கருப்பு, சிவப்பு மைகளைத் தயாரிக்கிறார்கள்.

பாக்கு மரம் 18 லிருந்து 20 மீட்டர் உயரம் வளர்ந்து அழகாக விளங்குகிறது. இதன் அடிமரம் பருக்காமல் நீண்டு உயர்ந்து மூங்கில் போலிருக்கும். இதற்குக் கிளைகள் கிடையாது. அடிமரத்தின் குறுக்களவு சுமார் 15 செ.மீ. பாக்குக் காய்களைப் பறிப்பவர்கள் தோப்பில் ஒரு மரத்தில் ஏறிக் காய்களைப் பறித்துக் கொண்டு மரத்தின் மீதிருந்து அதனை வளைத்து மறு மரத்தைப் பற்றுவார்கள். இம்மரம் நன்கு வளைந்து கொடுக்கும்.

பாக்கு மரம் ஐந்தாண்டிற்குப் பிறகு காய்க்கத் தொடங்குகிறது. ஒரு மரத்தில் ஒரு ஆண்டில் ஐநூறு காய்கள் வரை காய்க்கும். முதலில் பச்சையாயும் பிறகு ஆரஞ்சு நிறத்திலும் முடிவில் சிவப்பாயும் இது இருக்கும். நாருடன் கூடிய இக்காய்க்குள் விதை இருக்கும். பாக்கு மரம் வளர நிறைய மழை தேவை. எனவேதான் இவை கேரளம், மேற்கு வங்காளம், அஸ்ஸாம் மாநிலங்களில் அதிகமாக வளர்கின்றன.

இம்மரத்தில் இலைகளின் கீழ்ப் பூக்கள் கொத்துக் கொத்தாய்ப் பூக்கும். பூக்களைக் காக்க பாளைகள் உண்டு. இவற்றின் இலைகளைக் குடிசைகளின் கூரைகள் வேயப் பயன்படுத்துகிறார்கள்.



# வேத வியாசர்

உலகில் மிகப் பழமையானதெனக் கருதப்படும் வேதங்கள் ரிக், யஜுர், சாம, அதர்வணம் என நான்காகத் தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றை எழுதியவர் யாரெனத் தெரியவில்லை. ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன் வேதங்கள் எழுதப்பட்டன என்று கருதுகிறார்கள். ரிஷிகள் தியானத்தில் இருக்கையில் இவற்றை பகவானே அவர்கள் மனதில் பதிய வைத்தாராம். வேதங்களின் மூல புருஷர் பகவானே என்றுதான் கருதப்படுகிறது.

இப்படியாக வெளிவந்த வேத மந்திரங்களைத்தான் வேத வியாசர் நான்கு பாகங்களாகத் தொகுத்தார். இது வாய் வழியாகத்தான் இருந்தது. எழுத்து வடிவில் இருக்கவில்லை. குரு சீடனுக்கு இம்மந்திரங்களைக் கற்பிக்க இவை வாய் வழியாகவே சீடர்களால் பரப்பப்பட்டன. வெகுகாலத்திற்குப் பிறகே இவை எழுத்து வடிவம் பெற்றன.

மகாபாரதத்தை இயற்றி இந்திய பண்பாட்டைத் துலங்கச் செய்தவர் வியாச முனிவர். நம் நாட்டில் இராமாயணம் போல் புகழ் பெற்றது மகாபாரதம். உலகில் வேறு எந்த மொழியிலும் இவ்வளவு நீண்ட காவியம் இயற்றப்படவில்லை. கிரேக்க புராண காவியங்களான ஹோமரின் 'இலியட்'டையும் ஒடிஸஸியையும் ஒன்று சேர்த்தாலும் இவை மகாபாரதத்தில் எட்டில் ஒரு பங்குதான் ஆகும்.

பாத்திரங்களை உயிருள்ளவையாகப் பேச வைத்து அற்புத சம்பவங்களை அளித்து மனதைக் கவரும் வகையில் மனித வாழ்க்கையின் மேடு பள்ளங்களையும், நல்லவை கெட்டவைகளையும், தர்மம், அதர்மம் என்பனவற்றையும்

சாஸ்திர சம்பிரதாயங்கள் வழுவாமல் எடுத்துக் காட்டும் மகத்தான மாபெரும் காவியம் மகாபாரதம் வியாசர் இதனை இயற்றியதோடு இதில் அவரே ஒரு பாத்திரமாகவும் வருகிறார். இது இதன் சிறப்பாகும்.

வியாசர் மகாபாரதத்தை எழுத ஒரு எழுத்தரைப் பற்றி யோசிக்கலானார். அப்போது பிரம்மதேவர் அவர் முன் தோன்றி விநாயகரை அப்பணிக்கு உதவ அழைத்துக் கொள்ளும்படிக் கூறினாராம். வியாசரும் விநாயகரை வேண்டவே அவரும் "நான் வேகமாகத் தொடர்ந்து எழுதிக் கொண்டே இருப்பேன். நீ அந்த வேகத்திற்கு ஏற்ப செய்யுள்களைக் கூறிக் கொண்டே வர வேண்டும்" என்று நிபந்தனை விதித்தாராம்.

வியாசரும் "நான் அவ்விதமே கூறுகிறேன். ஆனால் நீங்கள் அவற்றைப் புரிந்து கொண்டு பிறகே எழுத வேண்டும்" என எதிர் நிபந்தனை விதித்தாராம். அதன்பின் இருவரும் வியாச குகைக்குள் போய் அமர்ந்து மகாபாரதத்தை எழுதி முடித்தார்களாம். வியாசர் என்றால் விளக்குபவர் என்று பொருள்.

வேதங்களை நான்காகத் தொகுத்த வேத வியாசருக்குக் கிருஷ்ணத்வைபாயனர் என்ற மற்றொரு பெயரும் உண்டு. வேத வியாசர் மகாபாரதம் மட்டுமல்லாமல் பதினெட்டு புராணங்களை இயற்றியதாகவும் கூறுகிறார்கள். ஆனால் சில புராணங்களை இயற்றிய அவரது சீடர்கள் தம் குருவின் மீது கொண்ட பக்தியால் அவற்றை வியாசரே இயற்றினார் என்று கூறிவிட்டார்கள் எனவும் கருதப்படுகிறது. வியாசர் எக்காலத்தில் வாழ்ந்தார் என்று திட்ட வட்டமாகக் கூற இயலவில்லை. ஆனால் ஐயாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்திருந்திருக்கலாம் என அறிஞர்கள் கருதுகிறார்கள்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. எலிபெண்டா குகைகள் எங்கே உள்ளன?
2. 15-வது நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு மகானை இந்துக்களும் முஸ்லீம்களும் தம்மவர் என கருதுகிறார்கள். அவர் யார்?
3. நம் நாட்டின் முதலாவது பெண் டாக்டர் யார்?
4. நம் நாட்டில் முதலில் விமான தளம் எப்போது ஏற்பட்டது?
5. நம் நாட்டில் எப்போது முதன் முதலாகத் தபால் தலைகள் புகுத்தப்பட்டன?
6. நம் நாட்டில் முதன் முதலாகக் கப்பல் கட்டும் தளம் எங்கு யாரால் நிறுவப்பட்டது?
7. 'காமன்வெல்த் நாள்' என்று கொண்டாடப்படுகிறது?
8. ஏசு கிருஸ்துவைச் சிலுவையில் அறைந்த போது அவர் தம் தாய் மேரியைப் பார்த்துக் கொள்ளும்படி தம் எந்த சீடனிடம் கூறினார்?
9. 'பழைய கட்டளை'களில் நோவா தாத்தாவாக யாரைக் கருதினார்கள்?
10. கிரிக்கெட்டை தேசிய விளையாட்டாகக் கொண்டுள்ள நாடு எது?
11. ஆகாய விமானத்தைக் கண்டு பிடித்த ரைட் சகோதரர்களின் தொழில் என்ன?
12. பறக்கும் தட்டுகளை முதலில் எப்போது பார்த்தார்கள்?
13. 'தி லேடி வித் லாம்ப்' என்று யாரைக் குறிப்பிடுகிறார்கள்?
14. ஐக்கிய நாடுகள் சபையின் முதலாவது பொதுச் செயலாளர் யார்?
15. அட்லாண்டிஸை முதலில் தன் நூலில் வர்ணித்த எழுத்தாளர் யார்?

# விடைகள்

1. பம்பாயில்
2. கபீர்
3. டாக்டர் ஆனந்தி பாய்ஜோஷி (188)
4. 1932 அக்டோபர் 8
5. 1952-ல்
6. விசாகப்பட்டணத்தில் ஹிந்துஸ்தான் ஷிப்யார்ட். 1941-ல் பம்பாயைச் சேர்ந்த வால்சந்த் ஹிராசந்தின் சிந்தியா ஸ்டீம் நேவி கேஷன் கம்பெனி.
7. மே 23
8. ஜான்
9. மெதுசிலா.
10. ஆஸ்திரேலியா
11. சைகிள் கடை நடத்தினார்கள்.
12. 1947 ஜூன் 24.
13. ப்ளாரன்ஸ் நைட்டிங்கேல்
14. டிரைக்கிரி லீ
15. ப்ளேடோ.



# நீலநிறப் பூ

வித்தியாநாதர் மாபெரும் பண்டிதர். அவர் தம் குருகுலத்தில் பத்து மாணவர்களை மட்டும் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு ஓராண்டு காலம் படிப்பு சொல்லிக் கொடுத்து ஆண்டு முடிந்ததும் அவர்களை அனுப்பி விடுவார்.

ஓராண்டில் சிவபுரியைச் சேர்ந்த சிவராஜன் என்பவனோடு ஒன்பது பேர்கள் அந்த ஆசிரமத்தில் கல்வி பயிலத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஒரு மாதமானபின் வித்தியாநாதர் தம் சீடர்களில் ரவீந்திரன் என்பவனுக்கு மட்டும் தனியாக தினமும் ஏதோ கற்பிப்பதை மற்ற மாணவர்கள் கவனித்தார்கள்.

ஒருநாள் ஒன்பது சீடர்களும் ஒன்றாகத் தம் குருவைக் கண்டு "ஐயா! நீங்கள் ரவீந்திரனுக்கு மட்டும் தனியாக ஏதோ கற்பிக்கிறீர்கள். எங்களுக்கும் அவ்வாறு கற்பிக்கக் கூடாதா? எங்களிடம் ரவீந்திரனைவிட அதிகத் திறன் இல்லை என்றா கருதுகிறீர்கள்?" என்று கேட்டார்கள்.

அதற்கு வித்தியாநாதரும் "நம் கையில் ஐந்து விரல்கள் உள்ளன. ஆனால் அவை ஒன்று போல இல்லையே. அதுபோல என் சீடர்களிலும் வேறுபாடு உள்ளது சிலர் சட்டென்று ஒரு தடவை சொன்னால் புரிந்து கொள்வார்கள். வேறு சிலருக்கு பலமுறை சொன்னால்தான் புரியும். ரவீந்திரன் முதல் ரகத்தை சேர்ந்தவன். அதனால்தான் மேலும் கற்க வேண்டும் என்று ஆர்வம் கொண்டுள்ள அவனுக்குத் தனியாக சொல்லிக் கொடுக்கிறேன்" என்றார்.

அதைக் கேட்ட அந்த சீடர்கள் வாயடைத்துப் போனார்கள். இப்படியாக ஒரு வருட காலம் கழிந்தது. சீடர்கள் குருகுலத்தை விட்டுப் போகிற நேரமும் வந்தது. அப்போது

-கி. அருணா-



வித்தியாநாதர் பத்து விதைகளை எடுத்து உள் கைக்குள் வைத்து நன் றாகக் குலுக்கி ஆளுக்கு ஒரு விதை யாகக் கொடுத்தார்.

அதன்பின் வித்தியாநாதர் "நான் இந்த விதைகளைப் பாரபட்சம் காட் டாமல் ஆளுக்கு ஒன்று வீதம் கொடுத் திருக்கிறேன். இவற்றை நட்டு செடி யாக்குங்கள். இவற்றில் ஒரு விதை யிலிருந்து முளைக்கும் செடியில் மட்டும் நீல நிறப் பூ பூக்கும். அந்த விதை இப்போது யாருக்குக் கிடைத் திருக்கிறது என்று எனக்குத் தெரி யாது. ஆனால் அப்படிப் பூத்த மலரை அந்தச் சீடன் எடுத்து வந்து குருதட்சிணையாக எனக்குக் கொடுக்க வேண்டும். அதுதான் நீங்கள் கொடுக்கும் குருதட்சிணை" என்றார்.

சிவராஜனும் "குருவே! நீங்கள் கூறுவதைப் பார்த்தால் அந்த மலரில் ஏதோ சிறப்புத் தன்மை இருப்பதாகத் தெரிகிறது"என்றான். வித்தியாநாத ரும் "ஆம். அதை மென்று தின்றால் மழை பெய்யப் போவதை முன் கூட்டியே தெரிந்து கொள்ளலாம். இந்த சக்தியை யார் வேண்டுமானா லும் அடைந்து விடலாம். ஆனால் எனக்கு மட்டும் இந்த சக்தி என் மாணவன் எனக்குக் கொடுக்கும் பூவினால்தான் கிடைக்கும். இது என் குருநாதரின் வாக்கு" என்றார்.

சீடர்கள் எல்லோரும் தமக்குக் கிடைத்த விதைகளை பத்திரமாக எடுத்துக் கொண்டு தத்தம் ஊர்களுக் குப் போய்ச் சேர்ந்தார்கள். சிவராஜன் சிவபுரியை அடைந்ததும் தனக்குக் கிடைத்த விதையைத் தன் வீட்டுக் கொல்லைப் புறத்தில் நட்டான் சிவ ராஜன் வித்தியாநாதரின் குருகுலத்தில் படித்து விட்டு வந்திருக்கிறான் எனத் தெரிந்து பலர் அவனைக் கண்டு அவன் என்னென்ன படித்தான் என்று விசாரித்தனர்.

சிவராஜனும் தான் படித்ததை எல்லாம் கூறவே அவர்களும் "நீ என்ன படித்திருந்தாலும் இந்த ஊரில் எப்போது மழை பெய்யும் என்பதைச் சொன்னால்தான் எங்க ளுக்குப் பயன் உள்ளதாக இருக்கும். மழை பெய்யப்போவது பற்றி முன்

கூட்டியே தெரிந்து கொண்டால் அதற்கு ஏற்ப நாங்கள் விவசாய வேலைகளைச் செய்யலாமே" என்றனர்.

இதைக் கேட்டதும் சிவராஜன் யோசனையில் ஆழ்ந்தான். தன் குரு கொடுத்த விதையிலிருந்து செடி முளைத்து அதில் நீலப் பூ பூத்தால் அதைப் பறித்து குருவிடம் கொடாமல் தானே சாப்பிட்டால் மழை பெய்யப் போவதை முன் கூட்டியே அறிந்து சொல்லலாமே என்று அவன் நினைத்தான்.

அன்று முதல் தான் விதைத்த விதை செடியாகி நீல மலர் கொடுக்க வேண்டும் என்று தினமும் கோவிலுக்குப் போய்க் கடவுளை வேண்டிக் கொண்டான். விதை முளைத்துச் செடியானதும் உரமிட்டு நீர் பாய்ச்சி அவன் அதனை அக்கறையுடன் கவனித்துக் கொண்டான். செடி மொட்டு விட்டு நீல மலரும் பூத்தது. சிவராஜனின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

அவன் உடனே அந்த மலரைப் பறித்துக் கையில் வைத்து கொண்டான். அதை வாயில் போட்டு மெல்லலாமா அல்லது குருவிடம் கொண்டு போய்க் கொடுத்துவிடலாமா என்று ஒரு நிமிடம் யோசித்தான். அப்போது அவன் "குருதான் பாரபட்சமாக நடந்து கொண்டாரே. அந்த ரவீந்திரனுக்குத்தானே விழுந்து விழுந்து எல்லாம் சொல்லிக் கொடுத்



தார்! அப்படி இருந்தும் நீலமலர் அவனுக்குக் கிடைத்த விதையிலிருந்து அவனுக்குக் கிடைக்கவில்லை. எனக்குத்தான் கிடைத்தது. என் பிரார்த்தனை வீண் போகவில்லை. கடவுளாகப் பார்த்து இதை எனக்குக் கொடுத்திருக்கிறார். எனவே பாரபட்சம் காட்டிய குருவிற்கு இதனை தட்சணையாகக் கொடுக்காமல் நானே மென்று சாப்பிட்டு மழை வருவது பற்றி அறியும் சக்தியை அடைந்து விடுகிறேன்" என்று எண்ணினான்.

அவன் அந்தப் பூவை வாயில் போட்டு மென்றான். மறு நிமிடமே தன்னுள் ஏதோ மாறுதல் ஏற்பட்டது போல அவன் உணர்ந்தான். இன்னும் இரண்டு நாட்கள் கழித்து



மழை பெய்யும் என அவனுக்குத் தோன்றவே அதை ஊராருக்குத் தெரிவித்தான்.

அவன் ஊர் பிரமுகர்களிடம் "நான் இப்போது ஒரு அரிய சக்தியைப் பெற்றுவிட்டேன். அதனால் மழை எப்போது பெய்யும் என்பதை என்னால் முன்கூட்டியே சொல்ல முடியும். நான் கூறியபடி நடக்கப் போவதைப் பாருங்கள்" என்றான். அப்போது நல்ல வெயில் அடித்துக் கொண்டிருந்தது. ஆகாயத்தில் எங்கும் மேகமே இல்லை. மேலும் அது மழைக்காலமும் அல்ல. அதனால் சிவராஜன் கூறியதை யாரும் நம்பவில்லை.

ஆனால் சிவராஜன் கூறியது போல இரண்டு நாட்கள் கழித்து நல்ல மழை பெய்தது. அது முதல் சிவராஜன் கூறுவதை அவ்வூரார் நம்பினர். அவனது மதிப்பு உயர்ந்து வருமானமும் பெருகலாயிற்று. வெளியூர்களிலிருந்து பலர் வந்து மழை பெய்வது பற்றிக் கேட்டுச் சென்றார்கள்.

இப்படி இருக்கையில் ஒரு ஆண்டில் அப்பகுதியில் கடும் வறட்சி ஏற்பட்டது. அதற்கடுத்த ஆண்டிலும் மழை பெய்யவில்லை. அப்போது சிவராஜன் தன் ஊராரிடம் "இன்னும் ஒரு மாதத்திற்கு இங்கு மழை இல்லை" என்று கூறினான்.

அப்போது அயலூரிலிருந்து சிவபுரிக்கு வந்திருந்த ஒருவன் கிராம அதிகாரியின் வீட்டிற்குச் சென்றான். அங்கு அதே வேளையில் சிவராஜனும் இன்னும் சில ஊர்ப் பிரமுகர்களும் இருந்தார்கள். அயலூரான் தன்னைப் பார்க்கத்தான் வந்திருக்கிறான் என்று நினைத்த சிவராஜன் "நாடே வறட்சியில் தவிக்கும் போது என்னிடம் கேட்டதாலேயே உங்கள் ஊரில் மட்டும் மழை பெய்து விடுமா?" என்று கேலியாகக் கூறினான்.

அயலூரானும் "ஐயா! முன்பெல்லாம் நீங்கள் மழை எப்போது பெய்யுமென்று சரியாகக் கூறிவந்தீர்கள். ஆனால் இப்போது நீங்கள் சொன்னது தவறு. எங்கள் ஊருக்கு ஒரு மகாபுருஷர் வந்திருக்கிறார்.

அவர் இன்னும் இரண்டு நாட்களில் மழை பெய்யும் என்று கூறினார். அதன்படி மழையும் பெய்தது. அவரை இந்த ஊருக்கும் அழைத்து வந்தால் நல்ல பயன் ஏற்படலாம்" என்றான்.

இதைக் கேட்டு சிவராஜன் தலை குனிந்து கொண்டான். ஊரார் உடனே அந்த மகாபுருஷனை அழைத்து வரச் சென்றனர். அந்த மகாபுருஷரும் அவ்வூருக்கு வந்து மறுநாளே அங்கு மழை பெய்யும் எனக் கூறினார். அவ்வாறே மழையும் பெய்தது.

சிவராஜன் வந்திருப்பவன் ரவீந்திரன் என அறிந்து அவனைக் கண்டு "இவ்வளவு நாட்களாக நான் மழை பற்றிக் கூறியது பலித்து வந்தது. ஆனால் இப்போது என் சக்தி குறைய நம் குரு ஏதாவது செய்து விட்டாரோ?" என்று கேட்டான்.

ரவீந்திரனும் "நம் குரு எதுவும் செய்யவில்லை. நம் எல்லோருக்குமே நீல மலர் பூக்கும் செடிகள் வரும் விதைகளைத்தான் தந்தார். அவர் எல்லோரையும் பரீட்சிக்க ஒரு விதையின் செடியில்தான் மலர் பூக்கும் என்று கூறினார். நான் ஒருவன்தான் அவரிடம் நீல மலரைக் கொண்டு போய்க் கொடுத்தேன். வேறு எந்த சீடனும் கொடுக்கவில்லை. என் குரு பக்தியைக் கண்டு மகிழ்ந்து அவர் எனக்கு வறட்சியின் போது மழையை வரவழைக்கும் சக்தியை அளித்தார். அந்த மலரையும் எனக்கே கொடுத்து அதை மென்று தின்னச் சொன்னார். என் சக்தியை துர்விநியோகம் செய்யக் கூடாது என்றும் கூறினார். அதனால் எனக்கு இப்படிப்பட்ட சக்தி இருக்கிறதென்று யாரிடமும் கூறாமல் மக்களுக்கு உதவி வருகிறேன்" என்றான்.

அப்போதுதான் சிவராஜனுக்கு தனக்கும் ரவீந்திரனுக்கும் என்ன வித்தியாசம் என்பது தெரிந்தது. குரு ரவீந்திரனுக்கு ஏன் தனியாகக் கற்றுக் கொடுத்தார் என்ற காரணமும் புரிந்தது.





# அழகா? அறிவா

வைரமங்கல சமஸ்தான மந்திரி திடீரென இறந்து விட்டதால் அவரது இடத்தில் வேறொருவரை எப்படி நியமிப்பது என மன்னன் யோசிக்கலானான். அமைச்சராகப் பொறுப்பேற்பவர் நிர்வாகத்திறமை பெற்றவராயும் அரசியல் அனுபவம் பெற்று அயல் நாடுகளுடன் சாதுரியமாக உறவாடி நடவடிக்கைகள் எடுக்கத் தெரிந்தவராயும் இருக்க வேண்டும்.

இந்தத் தகுதிகளோடு மந்திரியாக இருப்பவருக்கு கம்பீரமான தோற்றமும் அழகும் இருக்க வேண்டும் என மன்னன் கருதினான். அதனால் அப்பதவியை அடைய விரும்புவோர் மன்னன் விரும்பியபடி நல்லறிவும் அழகும் பெற்றிருக்க வேண்டும். என பறை சாற்றுவித்தான்.

மந்திரிப் பதவியைப் பல அறிஞர்கள் அடைய விரும்பினாலும் தமக்கு கம்பீரமானதோற்றமும் அழகும் இல்லையே என்று எண்ணி மன்னனைக் காணப்போகவில்லை. அழகாகவும் கம்பீரத்தோற்றமும் கொண்டவர்கள் அப்பதவியை அடைவதற்காக மன்னனை பேட்டி கண்டார்கள். ஆனால் அவர்களுக்கு அப்பதவிக்கு வேண்டிய அறிவும் அரசியல் அனுபவமும் இல்லாது போனதால் அவர்களில் யாருக்கும் அப்பதவி கிடைக்கவில்லை.

அந்நாட்டில் தலைநகரில் அனந்தன் என்பவன் வசித்து வந்தான். அவன் சிறந்த அறிஞன். எதையும் சட்டெனப் புரிந்து கொண்டு செயல்படுபவன். எல்லா சாஸ்திரங்களையும் கற்றவன். அரசியல், கலைத் துறைகளிலும் கைதேர்ந்தவன். இப்படியெல்லாம் இருந்தபோதிலும் அவனுக்கு அழகு இல்லை.

அவன் மந்திரிப் பதவியை அடைவது என்று தீர்மானித்து மனதில்

-நெல்லை கிருஷ்ணன்-

ஒரு திட்டம் வகுத்துக் கொண்டு துணிவுடன் மன்னனை பேட்டி காணச் சென்றான். அப்போது வாயில் காப்போன் வேறு யாரோ ஒருவனுடன் பேசிக் கொண்டிருந் தான். பேச்சு சுவாரசியத்தில் அவன் அனந்தன் மன்னனின் பூங்காவினுள் சென்றதைக் கவனிக்கவில்லை.

அப்போது மன்னன் பூங்காவில் ஒரு சாதாரண மனிதன் போலத்தான் இருந்தான். தலையில் மகுடம் இல்லை. விலையுயர்ந்த ஆபரணங் கள் அணிந்திருக்கவில்லை. பகட் டான உயர்ரக ஆடைகளும் உடுத்தி இருக்கவில்லை.

அனந்தன் அவரை அணுகாமல் சற்று தூரத்திலிருந்த தோட்டக்காரன் பக்கம் போய் நின்று. "அரசே! என் தாய் தந்தையர் இறந்து விட்டதால் அனாதையாகிவிட்டேன். எனக்கு வாழ வழி இல்லை. எனவே எனக்கு ஏதாவது ஒரு வேலை போட்டுக் கொடுங்கள்" என்று கேட்டான். இதைக் கேட்டுவிட்ட மன்னன் அனந்தனருகே வந்து "நீ எந்த நாட்டைச் சேர்ந்தவன்?" என்று கோபத்தோடு கேட்டான்.

அனந்தனும் "இந்த வைர மங்கல சமஸ்தானத்தைச் சேர்ந்தவன்தான்" என்றான். மன்னனோ "இந்த நாட் டைச் சேர்ந்தவனாக இருந்தால் இந் நாட்டின் மன்னன் யார் என்று கண்டு கொள்ள முடியவில்லையா? இந் நாட்டின் மன்னன் நான். நீ தவ றாக என் தோட்டக்காரனை மன்னன் என்று எண்ணிவிட்டாய்" என்றான்.



உடனே அனந்தன் பணிவுடன் மன்னனை வணங்கி "அரசே! என்னை மன்னியுங்கள். நான் இன்று வரைத் தங்களைப் பார்த்தது கிடையாது. அதனால்தான் இந்தத் தவறு நடந்து விட்டது. தங்கள் தலையில் மகுடம் இல்லை. உடலில் விலையுயர்ந்த ஆபரணங்கள் இல்லை. அதனால்தான் தங்களை மன்னர் என்று நினைக்க முடியாமல் போய் விட்டது. உயரமாயும், பருமனாயும், வலுவான உடலும், முறுக்கி விடப் பட்ட மீசையும் உள்ள இந்தத் தோட்டக்காரனைக் கண்டு ஏனோ இவன்தான் மன்னன் என எண்ணி விட்டேன்" என்றான்.

அப்போது மன்னனுக்குத் தான் மந்திரிப் பதவிக்கான தகுதிகளில் அழகையும் கம்பீர தோற்றத்தையும் சேர்த்தது நினைவிற்கு வந்தது. பொறுப்பான மந்திரிக்குக் கூரிய அறிவுதான் முக்கியம், அழகு தேவை இல்லை என்பதை மன்னன் அப் போது உணர்ந்தான்.

அவன் சிரித்தவாறே அனந்த னிடம் "மந்திரிப் பதவிக்கான என் அறிவிப்பில் இருக்கும் தவறை எவ்வளவு நாசுக்காக சொல்லிக் காட்டிவிட்டாய்! உன் போன்ற வனுக்கு சாதாரண வேலையா கொடுப்பது? இப்போது மகுடம் ஆபரணம் பகட்டான ஆடை இவை யெல்லாம் இல்லாத என்னைப் பார்த் தாலும் நாளை தர்பாரில் இவற்றோடு நான் இருக்கும் போது என்னை வந்து பார். அழகு, கம்பீரத் தோற்றம் என்று அறிவிக்கப்பட்ட தகுதிகளை நான் இப்போதே நீக்கிவிட்டேன். எனவே நாளைய பரீட்சையில் நீ கலந்து கொண்டு அப் பதவியை அடையலாம்" என்றான்.

மறுநாள் அனந்தன் மன்னன் கூறியபடி பரீட்சையில் கலந்து கொண்டு வெற்றி பெற்று மந்திரிப் பதவியை அடைந்தான். அவன் நீண்ட காலம் அப்பதவியை வகித்து திறமை மிக்க மந்திரி என்ற பெயரும் பெற்று விட்டான்.






பீமன் பாதாள லோகத்திற்குச் சென்றதை அறியாத தருமர் அவனை கங்கைக் கரை முழுவதிலும் தேடினார். அவன் கிடைக்காமல் போகவே அவர் துரியோதனனிடம் விசாரிக்க, அவனும் பீமன் ஹஸ்தினாபுரத்திற்குப் போய் விட்டதாகக் கூறினான்.

தருமர் ஹஸ்தினாபுரம் போய்த் தன் தாயிடம் பீமனைக் காணவில்லை எனவும் கடைசி முறையாக அவனைத் துரியோதனனோடு பார்த்ததாகவும் கூறினார். குந்தி விதுரரை அழைத்து "பீமனைக் காணவில்லை. அவனை துரியோதனன் கொன்றிருப்பானோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. ஏனெனில் பீமனைக் கண்டாலே துரியோதனனுக்கு வெறுப்பும் பொறாமையும்" என்றாள்.

விதுரர் அவளுக்கு ஆறுதல் கூறி "கவலைப்படாதே. பீமனுக்கு ஒரு ஆபத்தும் வராது. இன்னொரு விஷயம். துரியோதனனைப் பற்றி என்னிடம் கூறியது போல வேறு யாரிடமும் சொல்லாதே. துரியோதனன் கொடியவன். அவன் ஆத்திரப்பட்டு பாண்டவர்கள் அனைவரையும் கொன்றாலும் கொன்று விடுவான்" எனக் கூறிவிட்டுச் சென்றார்.

பீமன் நாகலோகத்தில் எட்டு நாட்கள் சுகமாகத் தூங்கினான். அவன் கண் விழித்ததும் நாகர்கள் "நீ குடித்த அபூர்வ ரசம் ஜீரணமாகி விட்டது. உனக்கு இப்போது ஆயிரம் யானைகளின் பலம் கிடைத்திருக்கிறது. இனி நீ கங்கைக்குப் போய்க் குளித்து விட்டு உன் உற்றாரை

-துரோணரின் கதை-



அடையலாம்" என்றனர்.

அவர்கள் பீமனை கங்கைக்கு அழைத்துப் போய்க் குளிப்பாட்டி அணிந்து கொள்ளப் பட்டாடைகளையும் விலையுயர்ந்த ஆபரணங்களையும் கொடுத்தார்கள். அவன் அவற்றை அணிந்து கொண்டு நாகர்களிடம் விடைபெற்றுக்கொண்டு ஹஸ்தினாபுரத்தை அடைந்தான்.

பீமன் உயிரோடு திரும்பி வந்தது கண்டு குந்தியும் பாண்டவர்களும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள். பீமன் குந்தியிடம் துரியோதனன் தன்னைக் கொல்ல முயன்றதைக் கூறித் தான் பாதாள லோகம் போய் புதிய பலம் பெற்று வந்ததை விவரமாகக் கூறினான். குந்தியும் பீமன் பெரும் ஆபத்திலிருந்து நல்ல விதமாகத் தப்பி வந்தது கண்டு சந்தோஷப்பட்டாள்.

பாண்டவர்களும் கௌரவர்களும் வில்வித்தை கற்க பீஷ்மர் கிருபாசாரியார் என்பவரை ஏற்பாடு செய்தார். அவரிடம் கொஞ்ச காலம் அரச குமாரர்கள் வில்வித்தை பயின்ற பின் அவர்களுக்கு மேலும் போர்க்கலைகளைக் கற்பிக்க ஹஸ்தினாபுரத்திற்கு வந்த துரோணாச்சாரியாரை பீஷ்மர் ஏற்பாடு செய்தார்.

துரோணர் பரத்துவாஜர் என்ற முனிவரின் மகன். அவர் வளர்ந்து வயதிற்கு வந்தபோது எல்லா சாஸ்திரங்களையும் கற்றுக் கொண்டு விட்டார். அவர் வில்வித்தையைக் கற்க அக்கினிவேசர் என்பவரின் குருகுலத்திற்குப் போய்ச் சேர்ந்தார். அங்கு அவர் தம் குருவிடமிருந்து பல அஸ்திரங்கள் எய்யும் முறைகளைத் தெரிந்து கொண்டார்.

அதே குரு குலத்தில் பாஞ்சால மன்னனின் மகன் துருபதனும் பயிற்சி பெற வந்திருந்தான். அவன் துரோணரின் நண்பனாகி தான் மன்னனானதும் தன் நாட்டில் பாதியை துரோணருக்குக் கொடுப்பதாகக் கூடக் கூறினான்.

குருகுலவாசம் முடிந்ததும் நண்பர்கள் பிரிந்தனர். பாஞ்சாலத்தில் துருபதன் பாஞ்சால மன்னனானான். துரோணரின் தாய் தந்தையர் இறக்

கவே அவரும் சிரமப்பட்டு வாழ்க்கை நடத்தினார். அவர் கிருபாச்சாரி யாரின் தங்கையான கிருபியை மணந்து கொண்டார். அவர்களுக்கு அசுவத்தாமன் என்ற ஆண் குழந்தை பிறந்தது.

துரோணரால் குழந்தைக்குப் பால் கூட வாங்கிக் கொடுக்க முடியாத நிலை ஏற்பட்டது. அப்போது அவ ருக்கு குருகுலத்தில் தன்னோடு படித்த துருபதனின் நினைவு வந்தது. பாதி நாட்டையே தனக்குக் கொடுப்பதாகக் கூறிய அவன் ஏதா வது உதவி செய்யாமலா போய் விடுவான் என நினைத்து துரோணர் அவனைக் காணப் புறப்பட்டார்.

அப்போது பரசுராமர் பிராம் மணர்களுக்குத் தன் பொருள்களை எல்லாம் தானம் செய்வதாகத் துரோ ணர் கேள்விப்பட்டார். அதனால் முதலில் அவரைக் காண துரோணர் சென்றார். அவர் பரசுராமரைக் கண்டபோது பரசுராமர் தம் பொருள் களை எல்லாம் தானம் கொடுத்து விட்டார். அவர் துரோணரிடம் "இப் போது என்னிடம் மீதம் இருப்பது வில்வித்தையும் போர்க்கலையுமே. அவற்றை உனக்குக் கொடுக்கிறேன்" என்று கூறி அஸ்திரங்களைப் பிர யோகிக்கும் விதத்தையும் அவற்றிற் கான மந்திரங்களையும் கூறினார்.

இவற்றைப் பெற்ற பின் துரோணர் தம் நண்பனான பாஞ் சால மன்னன் துருபதனைக் காணச் சென்றார். அவனோ இறுமாப்புக் கொண்டு அவரை யாரென்று தனக்





"ஐயா! எங்கள் பந்து இக் கிணற்றில் விழுந்து விட்டது. கொஞ்சம் அதை வெளியே எடுத்துக் கொடுக்கிறீர்களா?" என்று கேட்டார்கள். துரோணரும் "நீங்களெல்லாம் அரச குமாரர்கள். கிருபாச்சாரியாரிடம் வில் வித்தை கற்று வருபவர்கள் உங்களால் கிணற்றில் விழுந்த பந்தை வெளியே எடுக்க முடியவில்லையா? நான் என் மோதிரத்தை இக்கிணற்றில் போட்டு உங்கள் பந்தோடு இதையும் வெளியே எடுக்கிறேன். பாருங்கள்" எனக் கூறித் தன் மோதிரத்தைக் கிணற்றுள் போட்டார். பிறகு அவர் அம்புகளை ஒன்றன்பின் ஒன்றாக எய்து சங்கிலி போல் கோர்த்து கிணற்றில் இருந்த மோதிரத்தையும் பந்தையும் வெளியே எடுத்தார்.

பந்தைப் பெற்றுக் கொண்ட அரச குமாரர்கள் ஒரேயடியாக மகிழ்ந்து போனார்கள். அப்போது தருமர் "நீங்கள் எங்கள் குரு கிருபாச்சாரியாரைப் போய்ப் பாருங்கள். அவர் உங்களுக்கு வழிகாட்டுவார்" என்றார். அரசகுமாரர்கள் எல்லோரும் அவருக்கு நன்றி செலுத்தி வணங்கி "ஐயா பெரியவரே! இவ்வளவு சக்தி படைத்த தாங்கள் யாரோ?" என்று கேட்டார்கள்.

துரோணரும் "அரச குமாரர்களே, நான் யாரென்று சொன்னால் உங்களுக்குப் புரியாது. இங்கே நடந்ததை எல்லாம் உங்கள் பாட்டனாரிடம்

குத் தெரியாது எனக் கூறி ஏளனமாக பேசி அவமதித்தான். அதைப் பொறுக்க முடியாமல் துரோணர் ஹஸ்தினாபுரத்திற்கு வந்து கிருபாச்சாரியார் வீட்டில் தங்கி இருந்தார்.

ஒருநாள் மாலை அவர் வெளியே சென்று கொண்டிருந்தபோது ஒரு கிணற்றருகே கௌரவர்கள் நின்று கொண்டு ஏதோ பேசிக் கொண்டிருப்பதை கவனித்தார். அவர்கள் விளையாடிய பந்து அந்தக் கிணற்றில் விழுந்து விட்டது. அதை எப்படி வெளியே எடுப்பது என்றுதான் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் துரோணரைக் கண்டதும் அவரைச் சூழ்ந்து கொண்டு



சொல்லுங்கள். அவர் என்னை யாரென்று உடனேயே தெரிந்து கொண்டு விடுவார்" என்றார்.

அரச குமாரர்களும் உடனே ஓடிப்போய்த் தாம் கண்ட அதிசயத்தையும் அதைச் செய்து காட்டியவரையும் பற்றி விவரமாக பீஷ்மரிடம் கூறினார்கள். அவர் உடனே துரோணரை மரியாதையுடன் தம்மிடம் அழைத்து வரச் சொன்னார். துரோணர் வந்ததும் பீஷ்மர் அவரிடம் "நீங்கள் ஹஸ்தினாபுரத்தில் வந்திருக்கக் காரணம் என்னவோ?" என்று கேட்டார்.

துரோணரும் "நான் பரத்வாஜரின் மகன். கிருபாச்சாரியாரின் தங்கையை மணந்தவன். என் தந்தை இறந்தபின் ஏழ்மையில் அவதிப்படுகிறேன். எனக்கு அசுவத்தாமன் என்கிற ஆண் குழந்தை இருக்க அதற்குப் பால் வாங்கிக் கொடுக்க முடியாமல் போனேன். என்னுடைய குருகுலத்தில் படித்த துருபதனை நண்பன் என எண்ணிப் பாஞ்சால நாட்டிற்குச் சென்றேன். அவன் பாஞ்சாலத்தின் மன்னனாகி விட்ட மமதையில் என்னை யாரென்று கூடத் தெரியாது எனக் கூறி அவமதித்து அனுப்பி விட்டான். அதன் பிறகு இங்கு வந்து என் மைத்துனரான கிருபாச்சாரியாரின் வீட்டில் என் மனைவியோடும் குழந்தையோடும் இருக்கிறேன்" என்றார்.

பீஷ்மரும், "நீங்கள் இங்கு வந்தது எங்கள் அதிர்ஷ்டமே. எங்கள் குழந்தைகளின் குருவாக இருந்து அவர்களுக்கு எல்லாவற்றையும் கற்றுக் கொடுங்கள். உங்களுக்கு வேண்டிய வசதிகளை எல்லாம் செய்து கொடுக்கிறேன். எங்களுக்கும் ஆட்சி புரியவும் தக்க யோசனைகளை நீங்கள் கூறிவரவும் வேண்டும்" எனத் துரோணரிடம் கூறினார்.

துரோணரும் ஒரு நல்ல நாளில் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் கல்வி கற்பிக்க ஆரம்பித்தார். முதலில் அவர்களை எல்லாம் ஒன்று கூட்டி அவர் "உங்களுக்கு வில்வித்தை கற்றுக் கொடுத்து முடிந்ததும் எனக்காக ஒரு வேலையைச் செய்ய வேண்டும். யார் அதைச்

செய்ய முன் வருகிறீர்கள்?" என்று கேட்டார். ஒருவரும் பதில் சொல்ல வில்லை. ஆனால் அர்ஜுனன் மட்டும் "குருவே! நீங்கள் எதைச் செய்யச் சொன்னாலும் அதைச் செய்கிறேன்" என்றான்.

துரோணர் மிகவும் மகிழ்ந்து போனார். அவர் அர்ஜுனனைக் கட்டித் தழுவி "ஆகா! நீதான் என் பிரதம சீடன்" எனக் கூறி வாழ்த்தினார். துரோணரிடம் கௌரவர்களோடும் பாண்டவர்களோடும் ஹஸ்தினாபுரத்திற்கு வந்த யாதவ அரசகுமாரர்களும் சீடர்களாக இருந்து போர்க் கலையைப் பயின்று வந்தார்கள். தேரோட்டி மகனான கர்ணனும் அவரிடம் பயிற்சி பெற்று வந்தான்.

அப்போது முதல் கர்ணனுக்கு துரியோதனனுக்குமிடையே நட்பு ஏற்பட்டு நன்கு வளர்ந்தது. கர்ணனும் அவ்வப்போது பாண்டவர்களைக் கேலி செய்தும் அவமதித்தும் வந்தான்.

துரோணர் கற்றுக் கொடுத்த வில் வித்தையில் மிகச் சிறந்து விளங்கியவன் அர்ஜுனன் தமக்கு நிகராக வில் வித்தையில் விளங்குவான் என்று நம்பிககை கொண்டார். துரோணர் அவ்வப்போது தம் சீடர்களுக்கு ஒவ்வொரு சொம்பைக் கொடுத்து அதில் நீர் நிரப்பிக் கொண்டு வரச் சொல்லுவார். அவர் தம் மகனான அசுவத்தாமனுக்கு மட்டும் பெரிய வாயுள்ள சொம்பைக் கொடுத்தும் மற்றவர்களுக்குச் சிறிய வாய்ச்



சொம்புகளையே கொடுத்தும் வந்தார். எந்த சீடன் முதலில் சொம்பு நிறைய நீர் கொண்டு வருவானோ அவனுக்கு அவர் சிறப்பு அஸ்திரங்கள் எய்யும் விதத்தைப் போதிப்பார்.

பெரிய வாய்ச் சொம்புடன் செல்லும் அசுவத்தாமன்தான் முதலில் அது நிறைய நீர் நிரப்பிக் கொண்டு வந்து விடுவான். அர்ஜுனன் இதை கவனித்து வருணாஸ்திரத்தைப் பிரயோகித்துத் தன் சொம்பில் நீரை நிரப்பிக் கொண்டு அசுவத்தாமனோடு துரோணர் முன் வந்து நிற்கலானான். அதனால் அசுவத்தாமன் கற்றுக் கொண்ட ரகசிய அஸ்திரப் பிரயோகங்களை எல்லாம் அர்ஜுனனும் தெரிந்து கொண்டான்.

இதனால் அசுவத்தாமன் அர்ஜுனன் மீது பொறாமை கொண்டான். ஒரு நாளிரவு தன் சீடர்களோடு அமர்ந்து துரோணர் உணவு உண்டு கொண்டிருந்தார். அப்போது காற்று வீசி விளக்கு அணைந்து விடவே அங்கு இருட்டாகி விட்டது. அதனால் சாப்பிடுவதில் எவ்விதத் தடையும் இராது என்று எண்ணிய அர்ஜுனன் "நம் கை பழக்கத்தினால் இருட்டில் கூட உணவை வாயில் போட்டு விடுகிறது. இதுபோல இருட்டில் அம்பு எய்து குறியை அடிக்கப் பழகலாமே" என்று எண்ணினான்.

அன்று முதல் அர்ஜுனன் இரவில் இருட்டில் அம்பைக் குறிவைத்து எய்து பழகலானான். ஒருநாளிரவு துரோணர் எங்கிருந்தோ வில்லின் நாண் ஒலிக்கும் சத்தம் கேட்டு எழுந்து சென்று பார்த்தார். அப்போது அர்ஜுனன் இருட்டிலும் அம்பு எய்து பழகுவதைக் கண்டார்.

அவர் ஒரேயடியாக மகிழ்ந்து போய் ஓடிச் சென்று அர்ஜுனனைக் கட்டித் தழுவிக் கொண்டார். அவர் அர்ஜுனனுக்கு எல்லாவித அஸ்திர சஸ்திரப் பிரயோகங்களையும் அதற்கான மந்திரங்களையும் கூறினார். வியூகங்கள் அமைப்பதிலும், அர்ஜுனனுக்கு சிறப்புப் பயிற்சி அளித்தார்.





# கீதா கல்யாணம்

மண்ணூரில் மங்கம்மா பத்திரகாளி என்று பெயர் பெற்றவள். அவளுக்குப் பணத்தாசை மிக அதிகம். ஆனால் பணம் சம்பாதிக்கும் வழி ஒன்றும் அவளுக்குத் தெரியாது. அவளுக்கு ஒரு மகனும் ஒரு மகளும் இருந்தனர். அவர்கள் தந்தை இறந்து போனார். அவர் வைத்துப் போன பணத்தில் மங்கம்மா தன் இரு குழந்தைகளையும் வளர்த்துப் பெரியவர்களாக்கினாள்.

அவள் தன் மகள் லட்சுமியை எப்படியோ கல்யாணம் செய்து அனுப்பி விட்டாள். இனி மகன் கோவிந்தனுக்குத்தான் பெரிய பணக்கார வீட்டுப் பெண்ணைத் தேடிப் பிடித்துக் கல்யாணம் செய்து வைத்து வரதட்சணை, சீர் என்று நிறையப் பணம் வாங்கி விட வேண்டுமென்று மங்கம்மா எண்ணலானாள்.

கோவிந்தனுக்கு அரசாங்க வேலை. அதனால் பலர் அவனுக்குப் பெண் கொடுக்க முன் வந்தார்கள். ஆனால் மங்கம்மா வந்த சம்பந்தங்களை எல்லாம் ஏதோ ஒரு காரணம் சொல்லித் தட்டிக் கழித்துக் கொண்டிருந்தாள். அதற்குக் காரணம் பெண் கொடுக்க வந்தவர்கள் கொடுக்க முன் வந்த வரதட்சணையும் சீரும் மிகக் குறைவு என மங்கம்மா நினைத்ததுதான். கோவிந்தனோ தன் வீட்டிலிருந்து நான்கு வீடுகள் தள்ளியுள்ள கீதா என்ற பெண்ணை மணக்க விரும்பினான்.

கீதா புத்திசாலி. சூடிக்கையானவள். மிகவும் பொறுமையானவள். ஆனால் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள். மேலும் அவளது தந்தை சோமுவுடன் மங்கம்மா சண்டையிட்டுப் பகைமை பாராட்டி வந்தாள். எனவே தனக்கும் கீதாவுக்கும் விவாகம் நடப்பதிலுள்ள சிரமத்தை கோவிந்தன் புரிந்து கொண்டான். அவன் கீதா

-எஸ். சோபினி-



கீதா தன் தந்தையோடு கலந்து ஆலோசித்து ஒரு திட்டம் போட்டு அதனை கோவிந்தனிடம் தெரிவித்தாள். அதற்கு ஒரு வாரத்திற்குப் பின் ஒரு விசித்திர சம்பவம் நிகழ்ந்தது.

அன்று கீதா வாசல் தெளிக்க காலையில் வீட்டிற்கு வெளியே வந்த போது வீட்டு வாசலில் ஒரு கிழ சன்னியாசி விழுந்திருப்பதைக் கண்டாள். உடனே அவள் தன் தகப்பனாரைக் கூப்பிட்டு "அப்பா! இங்கே ஓடி வந்து பாருங்கள். யாரோ ஒரு சன்னியாசியோ, யோகியோ நம் வீட்டு வாசலில் நினைவு இழந்து விழுந்து கிடக்கிறார்" என்று உரக்கக் கூறினாள். சோமுவும் ஓடி வந்து அந்த சன்னியாசியைத் தூக்கிக் கொண்டு வீட்டிற்குள் போனான்.

சற்று நேரத்திற்குப் பின் அந்த சன்னியாசியின் மயக்கம் தெளிந்தது. மெதுவாக அவரைப் பற்றிய விவரங்கள் தெரியலாயின. அந்த சன்னியாசியின் பெயர் அருளானந்தராம். அவரது வயது நூற்றிருபது வயதாம். அவர் தனது நூற்றிப் பத்தாவது வயது வரை இமயமலையில் இருந்து தவம் செய்தாராம். இன்னும் இரண்டு வருடங்களில் சமாதி அடைவாராம். அதற்கு முன் அவரது குருவின் கட்டளைப்படி தன் சக்தியை நல்லவர் பயன்பட உபயோகிக்க வேண்டும் என்று பாதயாத்திரை கிளம்பி ஊர் ஊராகச் சென்று வரு

விடமே ஏதாவது ஒரு வழி சொல்லும்படிக் கேட்டான்.

கீதாவும் "உங்கள் அம்மாவின் மனதை மாற்ற வேண்டும். அப்போதுதான் நாம் மணந்து கொண்டு சுகமாக வாழ முடியும். நாம் இருவரும் திருமணம் செய்து கொள்வது எனத் தீர்மானித்து விட்டதால் முதலில் அதற்கான வழி காண்போம்" என்றாள்.

கோவிந்தனும் "ஆமாம். என் அம்மாவின் மனதை மாற்றுவது அவ்வளவு எளிதல்ல. நீதான் பொறுமையாக எதையும் செய்ய வேண்டும்" என்றான். கீதாவும் "இன்னும் இரண்டு நாட்களில் ஏதாவது ஒரு திட்டத்தோடு வருகிறேன்" என்றாள்.

கிறாராம்.

அப்படி மண்ணூருக்கு வந்தவர்களைத்து தம் நினைவிழுந்து கீதாவின் வீட்டு வாசலில் விழுந்து விட்டார். அவரைப் பற்றிய விவரங்கள் அன்று மாலைக்குள் ஊர் முழுவதும் தெரிந்து விட்டன. பலர் அந்த மகானை தரிசிக்க பழம், பூவுடன் வந்தனர். ஆனால் எல்லோருக்கும் அவருடன் பேசும் வாய்ப்பு கிடைக்கவில்லை. ஓரிரு நல்லவர்களுக்கு மட்டுமே அந்த வாய்ப்பு கிட்டியது. அப்படிப்பட்ட பாக்கியவான்களில் மங்கம்மாவின் எதிர் வீட்டுக்காரனான நாராயணனும் ஒருவன்.



அருளானந்தர் நாராயணனுக்கு ஏதோ மகிமை பொருந்திய வரம் ஒன்றை அருளினாராம். இதை மங்கம்மா கேள்விப்பட்டாள். அவள் மனம் பொறுக்குமா என்ன? எதிர் வீட்டுக்காரனுக்கு மகான் வரம் கொடுத்தது போல எனக்கும் ஏன் அவர் கொடுக்கக்கூடாது என்று அவள் மனம் எண்ணியது. அவளுக்கு அந்த மகானை தரிசிக்க வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. ஆனால் சோமுவின் வீட்டிற்குள் எப்படிப் போவது என்று தயங்கினாள். முடிவில் அவள் சோமுவின் வீட்டிற்குப் போய் அந்த மகானைக் கண்டு தன் வீட்டிற்கு அவர் எழுந்தருள வேண்டும் என அவரிடம் வேண்டிக் கொள்வது என்று முடிவு செய்து கொண்டாள்.

மங்கம்மா ஒருநாள் அருளானந்தரை தரிசிக்க சோமுவின் வீட்டிற்குச் சென்றாள். ஆனால் அவளுக்கு உடனேயே தரிசனம் கிடைக்கவில்லை. அவர் அப்போது கீதாவுக்கு ஏதோ மந்திரோபதேசம் செய்து கொண்டிருக்கிறார் என்று மங்கம்மாவிடம் ஒருவர் தெரிவித்தார். சோமுகூட மங்கம்மாவை இன்முகத்துடன் வரவேற்று "மகான் கீதாவுக்கு லக்ஷ்மி கடாக்ஷ மந்திரம் உபதேசித்துக் கொண்டிருக்கிறார். ஆண்டுக்கு ஒருமுறை வரும் பங்குனி உத்திரத்தன்று பௌர்ணமி நிலவை தரிசித்து அந்த மந்திரத்தை எட்டுமுறை உச்சரித்தால் வீட்டில் எட்டு திசைகளிலிருந்தும் நூற்றெட்டு தங்க நாணயங்



கள் நிமிஷத்திற்கு ஒருமுறை எட்டு முறைகள் கொட்டும். எல்லாம் அந்த மகானின் வரப்பிரசாதம்" என்றான்.

இதைக்கேட்டதுமே மங்கம்மாவின் மனதில் கீதாவை தன் மகன் கோவிந்த னுக்குக் கல்யாணம் செய்து வைத்து விட வேண்டும் என்ற ஆசை ஏற்பட் டது. ஆண்டுக்கு ஒருமுறை ஆயிரம் தங்கக் காசுகள் கிடைக்கிறது என் றால் எவ்வளவு பணம்! சோமு ஏழை யாக இருந்தாலும் பரவாயில்லை. அவன் வரதட்சணை கொடுக்காவிட் டாலும் கவலை இல்லை. கீதாதான் தங்கக் காசாய்த் தரப்போகிறாளே என மங்கம்மா நினைத்தாள். சற்று நேரத்திற்குப் பின் கீதாவுக்கு மந்தி ரோபதேசம் முடிந்தது என அறி விக்கப்பட்டது. மங்கம்மா உள்ளே போய் மகானின் கால்களில் விழுந்து வணங்கினாள். அவரைத் தன் வீட் டிற்கு விஜயம் செய்யுமாறு வேண் டினாள்.

ஆனால் அருளானந்தரோ புன் னகை புரிந்தவாறே "அம்மணீ! இப் போது உன் வீட்டிற்கு வரஇயலாது. ஏனெனில் ஒரு ஊரில் ஒரு வார காலம்தான் தங்க வேண்டும் என்பது என் குருநாதரின் கட்டளை. இன்னும் ஆறுமாதங்கள் கழித்து கீதா லக்ஷ்மி கடாக்ஷ பூஜை செய்யும்போது நான் இவ்வூருக்கு வருவேன். என் முன் னிலையில்தான் அந்தப் பூஜை நடக் கப் போகிறது. அப்போது ஒரு நாளில் உன் வீட்டிற்கு வருகிறேன்" என்றார். "சுவாமி தங்கள் சித்தம் என் பாக்கியம். இன்னொரு சிறிய வேண்டுகோள். உங்கள் அன்பிற்குப் பாத்திரமாகியுள்ள கீதாவிடம் சிறு வயது முதல் நான் அன்புகாட்டி வருகிறேன். அவளை என் வீட்டு மருமகளாக்கிக் கொள்ளவும் துடித் துக் கொண்டிருக்கிறேன். ஆனால் அவளது தந்தைதான் என்னிடம் பகைமை கொண்டிருக்கிறார்" என்று கூறினாள்.

அதுகேட்டு அருளானந்தர் தம் கண்களை மூடிக் கொண்டு சற்று யோசித்தார். பிறகு கண்களைத் திறந்து "உன் ஒரே மகன் கோவிந்தன் தானே. அவன் அரசாங்க வேலை தானே பார்க்கிறான்?" என்று கேட்



டார்.

மங்கம்மாவும் "ஆமாம் சுவாமீ!" என்று மகிழ்ச்சி ததும்பக் கூறினாள். அப்போது அருளானந்தர் வெளியே யாருடனோ பேசிக் கொண்டு நின்று கொண்டிருந்த சோமுவைக் கூப்பிட்டு "இதோ பார்! இந்த மங்கம்மாவின் மகன் கோவிந்தன் மிகவும் நல்லவன். உன் மகள் கீதாவை அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்து விடு" என்றார்.

சோமுவும் "தாங்கள் சொல்வது போல் செய்கிறேன்" என்று பணிவுடன் கூறினான். அதற்கு ஒரு மாதத்திற்குள் சோமு தன் மகள் கீதாவை கோவிந்தனுக்குத் திருமணம் செய்து வைத்தான். கீதா உடனேயே கோவிந்தனுடன் குடித்தனம் செய்ய அவன் வீட்டிற்கு வந்து விட்டாள்.

அவள் வீட்டின் கொல்லைப் புறத்தில் காய்கறிச் செடிகளைப் பயிரிட்டாள். ஒரு ஓரத்தில் கொட்டகை போட்டு இரண்டு எருமைகளை விலைக்கு வாங்கி கட்டி பால் கறந்து விற்றுப் பணம் சம்பாதித்தாள். காய்கறிகளையும் விற்றதில் நிறையப் பணம் சேர்ந்தது. இதனால் மங்கம்மா வாங்கி இருந்த கடன்களெல்லாம் தீர்க்கப்பட்டது.

கீதா இப்படி பணம் சம்பாதித்தது கண்டு மங்கம்மா சந்தோஷப்பட்டாலும் அவள் கீதா எப்போது மந்திரத்தை உச்சரித்து தங்க நாணயங்களாகக் கொட்டச் செய்யப் போகிறாள் என்றே எதிர்பார்க்கலானாள்.

சில மாதங்களுக்குப் பின் பங்குனி உத்திரம் வந்தது. அன்று சோமுவும் நாராயணனும் அருளானந்தரோடு மங்கம்மாவின் வீட்டிற்கு வந்தார்கள். மங்கம்மா அருளானந்தரை மரியாதைகளுடன் வரவேற்கவே அவரும் "என்ன மங்கம்மா! உன் வீடு லக்ஷ்மிகரமாக விளங்குகிறதே. கீதாவின் முயற்சியா இது?" என்று கேட்டவாறே தன் பொய்த் தாடியையும் சடைகளையும் கழற்றி ஒரு பக்கமாக வைத்தார்.

மங்கம்மா திடுக்கிட்டு அவரைப் பார்த்து "ஆ! நீங்களா!" என்று அலறினாள். அவரும் "ஆம் உன் சின்ன

மாமனாரான நான்தான் அருளானந்தர். கோவிந்தா! நான் உன் சின்ன தாத்தா. உன் அம்மா என் அண்ணனை அதாவது உன் தாத்தாவை அவரது மனைவியுடன் வீட்டைவிட்டு துரத்தியவள். இவள் தன் மாமியாருக்கும் மாமனாருக்கும் இழைத்த கொடுமைகளை சொல்லி முடியாது. நான் வீட்டில் கோபித்துக் கொண்டு ஒரு நாடகக் குழுவில் சேர்ந்து விட்டேன். மருமளால் துரத்தப்பட்ட உன் தாத்தாவையும் கடைசிவரை நான்தான் காப்பாற்றி வந்தேன். இதெல்லாம் இந்த சோமுவுக்கும் நாராயணனுக்கும் தெரியும். என்ன மங்கம்மா! நான் சொன்னதெல்லாம் உண்மைதானே?" என்று கேட்டார்.

மங்கம்மா தலைகுனிந்தவாறே நின்றாள். அப்போது அக்கிழவர் "இப்படி ஒரு நாடகத்தை கீதாவும் சோமுவும் நாராயணனும் நானுமாக நடித்தோம். மங்கம்மா நீ உன் மாமியாருக்கு என்னென்ன கொடுமைகள் செய்தாய் என்பதை கீதா அறிவாள். நீ நல்லபடியாக நடந்து கொண்டால் இந்த வீட்டில் இருக்கலாம். ஏதாவது சில் விஷமம் செய்தால் கீதாவும் உன்னைப் போல மாறி உன்னை வீட்டைவிட்டுத் துரத்தி விடுவாள். ஜாக்கிரதை" என்றார்.

மங்கம்மா சட்டெனத் தன் சின்ன மாமனார் கால்களில் விழுந்து "மாமா! என் தவறை உணர்ந்து விட்டேன். கீதா எனக்கும் மருமகளாகக் கிடைத்தது என் அதிர்ஷ்டமே. அவள் என் வீட்டில் அடி எடுத்து வைத்தபிறகு வீட்டின் நிலையில் நல்ல மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. அவள் லக்ஷ்மி கடாக்ஷப் பூஜை செய்யாமலேயே பணத்தைக் குவித்து வருகிறாள். அவளே சாட்சாத் லக்ஷ்மிதேவிதான்" என்றாள்.

அதுகேட்டு அங்கிருந்த யாவரும் மங்கம்மா மாறியது கண்டு மிகவும் சந்தோஷப்பட்டார்கள்.








# தலைக்குனிவு

**வெ**குகாலத்தில் மித்திரவசு என்ற முனிவர் மகாவிஷ்ணுவைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தார். பல ஆண்டுகள் கழிந்தபின் மகாவிஷ்ணு லக்ஷ்மி தேவியுடன் அந்த முனிவர் முன் தோன்றி "உன் தவத்திற்கு மெச்சினோம். உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார்.

மித்தரவசு திக்குமுக்காடிப் போனார். ஏனெனில் அவர் மகாவிஷ்ணுவை தரிசிக்க வேண்டும் என எண்ணித்தான் தவம் செய்தாரே யொழிய வேறு எந்த விருப்பம் கொண்டும் தவம் செய்யவில்லை. அவர் மௌனமாக நிற்பது கண்டு லக்ஷ்மி தேவி "பக்தா! இப்போது நீ எந்த வரமும் கேட்க முடியாது போனாலும் நன்றாக யோசித்து வைத்துக் கொள். நாங்கள் ஒரு மாதம் கழித்து வருகிறோம். அப்போது கேள்" எனக் கூறினாள்.

மித்திரவசு பார்த்துக்கொண்டிருக்கும் போதே விஷ்ணுவும் மகா லக்ஷ்மி தேவியும் மறைந்து போனார்கள். மித்திரவசு மகாவிஷ்ணுவை தரிசனம் செய்ததை எல்லோரிடமும் கூற எல்லோரும் அவரைத் தவ சிரேஷ்டர் என புகழ்ந்து கூறினார்கள்.

இந்தப் புகழ்ச்சியால் மித்திரவசு தன்னைவிடச் சிறந்த தவயோகி உலகில் யாருமே இல்லை என்று எண்ணி கர்வம் கொண்டு விட்டார். ஒருமுறை அவர் தம் சீடர்களுடன் கங்கை நதியில் நீராட சென்றார். அப்போது ரைவதர் என்ற ராஜரிஷி கங்கையில் நீராடிவிட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தார்.

மித்திரவசுவின் சீடர்களுக்கு ராஜ போகம் அனுபவித்து மனைவி மக்களுடன் இல்லறம் நடத்தும் ரைவதரை ரிஷி என்று எப்படி அழைக்கலாம் என்ற சந்தேகம் ஏற்பட்டது.

-ரேணுகா ரவி-

அதை அவர்கள் தம் குருவிடம் கேட்கவே மித்திரவசுவும் "இந்த ரைவதரை ரிஷி என்று எப்படிக் கூறுமுடியும்? முற்றும் துறந்து காட்டில் கடுந்தவம் செய்தாலே கடவுளை தரிசிக்க முடியும். என் போன்றவர்களே ரிஷிகள். இவரைப் போன்றவர்களை அவ்வாறு கூற முடியாது" என்று கர்வத்தோடு கூறினார்.

ஆனாலும் அவர் கூறிய விடை அவருக்கே திருப்தி அளிக்கவில்லை. ஒரு மாதம் முடியும்போது மகாவிஷ்ணுவின் தரிசனம் கிடைக்கப் போவதால் அவரிடமே அதுபற்றிக் கேட்பது என அவர் எண்ணிக் கொண்டார். ஒரு மாதமும் முடிந்தது. மகாவிஷ்ணுவும் லக்ஷ்மியும் அவர் முன் தோன்றினார்கள்.

மித்திரவசு தன் சந்தேகத்தை மகாவிஷ்ணுவிடம் கேட்கவே பகவானும் "அப்பனே! எனக்கு பக்திதான் முக்கியம். நிர்மலமான மனதோடு என்னை வழிபடுபவனே என் பக்தன். மனதில் பல ஆசைகளையும் அழுக்கையும் வைத்துக் கொண்டு உடலை வறுத்தித் தவம் செய்பவன் என் பக்தனாகி விட மாட்டான். இதை நீ நன்றாகப் புரிந்து கொள்ள காவேரிக் கரையிலுள்ள ஆடுதுறைக்குப் போ. அங்கு தருமன் என்பவனின் வீட்டிற்குச் சென்றால் உன் சந்தேகம் தீரும்" என்று கூறி மறைந்தார்.

மித்திரவசு தன் சீடர்களுடன் ஆடுதுறைக்குக் கிளம்பினார். வழியில் ஓரிடத்தில் காவேரியில் இறங்கிக்



குளித்தபோது ஒரு முதலை அவரது காலை பலமாகப் பற்றிக் கொண்டது. அதுகண்டு அவரது சீடர்கள் யாராவது உதவுங்கள் என்று உரக்கக் கூறினார்கள். ஆனால் மித்திரவசு சற்றும் பயப்படாமல் அம்முதலையை உற்றுப் பார்க்கவே அது துடிதுடித்து இறந்து போயிற்று. இதனால் மித்திரவசு தன் தவ வலிமை மிக அதிகம் என கர்வப்பட்டுக் கொண்டார்.

இதற்கு இரண்டு நாட்களுக்குப் பின் அவர் தம் சீடர்களோடு ஆடுதுறையை அடைந்து தருமனின் வீட்டிற்குச் சென்றார். அப்போது தருமனின் மனைவி வாசல் கதவோரம் உட்கார்ந்து கொண்டு பழம் புடவையின் கிழிசலைத் தைத்துக் கொண்டிருந்தாள். அவள் மித்திரவசு வருவதைக் கண்டதும் "ஐயா! என் கணவர் வெளியே போயிருக்கிறார். அவர் வரும் வரை வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருங்கள்" என்று கூறினாள்.

தன்னைப் போன்ற மாமுனிவரை வீட்டிற்குள் அழைத்து உட்கார வைக்காமல் திண்ணையில் அவள் இருக்கச் சொல்லி விட்டாளே என்று மித்திரவசுவிற்குக் கோபம் வந்தது. கதவோரம் உட்கார்ந்திருந்த தருமனின் மனைவியை அவர் முறைத்துப் பார்த்தார். ஆனால் ஆற்றில் முதலை துடிதுடித்தது போல அவள் நடுநடுங்கித் துடிக்கவில்லை.

இதனால் மித்திரவசுவின் கர்வம் சற்று அடங்கியது. இதற்குள் தருமனும் வந்து விட்டான். தன்னைத் தேடி



வந்த அவர்களைத் தன் வீட்டிற்குள் அவன் அழைத்தும் சென்றான். தநமனின் மனைவி எல்லோருக்கும் உணவு படைத்தாள் தருமன் கையில் விசிறியுடன் நின்றான்.

அவர்களுக்கு பறிமாறப்பட்ட உணவு ஆறிப் போயிருந்தது. மித்திர வசு கேலியாக "அடேயப்பா! சாதம் எவ்வளவு சூடாக இருக்கிறது!" என்றார். எனவே தருமன் விசிறி கொண்டு வீசினான். என்ன ஆச்சரியம்! ஆறிப்போன சாதம் சூடாகி அதிலிருந்து ஆவியும் எழுந்தது! அது கண்டு மித்திரவசு திகைத்துப் போனார்.

அவர்கள் எல்லோரும் கை அலம்பக் கிணற்றடிக்குச் சென்றபோது நீர் நிறைந்த குடம் ராட்டினத்தில் ஒருபுறம் தொங்கிக் கொண்டிருப்பதைக் கண்டு திகைத்தார்கள். அப்போது அங்கு வந்த தருமனின் மனைவி "தண்ணீர் சேந்திக் கொண்டிருந்தபோது என் கணவர் கூப்பிட்டதால் குடத்தைப் பாதியிலே இழுக்கும்போது விட்டுவிட்டுப் போய் விட்டேன்" என்றாள்.

அவளது சக்திக்கு முன் தன் சக்தி ஒன்றுமே இல்லை என மித்திரவசு தெரிந்து கொண்டார். அவர் தருமனை வணங்கி "ஐயா! தவம் செய்யாதவர்களுக்குக் கூட பகவான் மோட்சத்தை அளிப்பாரா?" என்று கேட்டார்.

தருமனும் "தூய மனதுடன் யார் அவரை வழிபட்டாலும் அவர் மோட்சத்தை அளிப்பார். இதற்காகக் காட்டிற்குப் போய் கடுந்தவம் செய்ய வேண்டும் என்பதெல்லாம் இல்லை" என்றான்.

மித்திரவசுவுக்கு அப்போது உண்மை விளங்கியது. அவரது கர்வம் ஒழிந்தது. தன் போன்ற தவயோகிகளால்தான் பகவானை அடைய முடியும் என தான் நினைத்தது எவ்வளவு தவறு என எண்ணி அவர் தலைகுனிந்து கொண்டார்.



# இயற்கை விநோதங்கள்

## உணரும் சக்தி!

'ராட்டில் ஸ்நேக்' என்னும் ஒருவகைப் பாம்பு, இரவில் இரை தேடக்கிளம்புகிறது. அதன் கண்ணிற்கும் மூக்கிற்கும் இடையே உள்ள குழிவான பரப்பினால் வெப்பத்தை எளிதில் உணர்கிறது. அதனால் எதிரில் வரும் இரையைச் சட்டெனப் பிடித்துக் கொள்ள முடிகிறது!





## மிகப் பெரிய காட்டுப்பூனை

தென் அமெரிக்கக் காடுகளில் தென்படும் ஜாகுவார் எனப்படும் காட்டுப்பூனைதான் அமெரிக்கக் காட்டுப்பூனைகளில் மிகப் பெரியது. இதன் நிறை 300 பவுண்டுகள். அப்படியென்றால் இது ஒரு சிறுத்தைப் புலியை விட பளுவானது என்றாகிறது. இதன் உடல் மஞ்சள் பச்சை நிறமாயும் வட்டமான கருப்புப் புள்ளிகள் கொண்டதாயும் இருக்கும்.

## முதலில் பறந்த பூச்சிகள்!

தும்பிகள் உலகில் 30,0,000,000 ஆண்டுகளுக்கு முன் பிறந்ததாக நம்பப்படுகிறத. பறக்க முயன்ற பூச்சி வகைகளில் முதலாவது இடம் பெறுவது தும்பிகளே எனவும் ஆய்வாளர்கள் கூறுகிறார்கள். சில தும்பிகளுக்கு 70செ.மீ. நீளமுள்ள இறக்கைகள் கூட இருக்கின்றனவாம்.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 மார்ச் மாத இதழில் வெளியிடப்படும்


S.G. Seshagiri


S.G. Seshagiri

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ ஜனவரி 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600026

---

## நவம்பர் மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | : உலகை இதனால் பிடிப்பேன் |
| இரண்டாவது போட்டோ | : உலகை இசையால் கவர்ந்தேன் |
| பரிசு பெற்றவர் | : திரு. எம். ரவிசெல்வன், ஊத்துமலை. |


## அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 60-00

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி :

டால்டன் ஏஜென்சீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை - 600 026.

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.






PARLE
POPPINS